





**டாடா 501 ஸ்பெஷல்**

**அவைகளை**

**சிறப்பாக**

**சலவை செய்கிறது**







சுதேசிப் பொருள்களை வாங்கி இந்தியத் தொழில்களை ஆதரியுங்கள்.

டாடா ஆயில் மில்ஸ்

கல்கி

மலர் 15
இதழ் 24

மன்மத ரு
தை 2

15, ஜனவரி 1956

# பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 15
இதழ் 24

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மன்மத ௵
தை மீ 2

# பொங்குக பால்!

நாடெங்கும் பொங்கற்பண்டிகை கொண்டாடும் புண்ணிய காலத்தில் 'கல்கி' வாசகர்களுக்கு நம்முடைய மனமார்ந்த பொங்கல் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

'தமிழர் பண்டிகை' என்றும், 'உழவர் திருநாள்' என்றும், 'ஆதித்தன் பூஜை' என்றும், 'மாட்டுப் பொங்கல்' என்றும், 'போகிப் பண்டிகை' என்றும், 'கனுப் பொங்கல்' என்றும் பல முறையிலே அழைக்கப்பட்டு வரும் இந்தத் திருநாள், தமிழ் நாட்டில் எத்தனையோ பல நூற்றுண்டுகளாக ஜாதி, சமயம், செல்வநிலை முதலிய எந்த விதமான பேதமும் இன்றி, எல்லாராலும் ஒருமித்துக் கொண்டாடப்பட்டு வருகிறது.

மக்கள் குலத்தோடு, பால் தரும் பசுக் குலமும் உழவுக் காளைகளும் காக்கை குருவிகளும் இந்தப் பண்டிகையிலே கலந்து கொண்டாடுகின்றன. முக்கியமாகக் கன்னியர்கள் கொண்டாடும் பெரு விழா இது. இந்த விழாக் காட்சியையே இந்த இதழின் அட்டையில் சித்திரிக்கிறார் நமது ஓவியர் மணியம்.

மழைக் கடவுளான இந்திரனுக்குத் தமிழர்கள் எத்தனையோ விதத்தில் விழாக் கொண்டாடியது போல, இந்தப் பொங்கல் விழாவும் மழைக் கடவுளுக்கு மக்கள் செலுத்தும் நன்றி விழா என்றும், சூரியனுடைய உத்தராயண ஆரம்ப நாளில் பக்தர்கள் செலுத்தும் காணிக்கை என்றும், கோவர்த்தன கிரியைக் குடையாகப் பிடித்து மக்களைக் காப்பாற்றிய திருமாலுக்குச் செய்யும் பூஜையே பொங்கல் என்றும், தமிழ் நூல்கள் இந்தப் பொங்கல் விழாவைப் பற்றிப் பல கதைகள் கூறுகின்றன. உணவு தரும் நிலத்தையும், உழுகின்ற கலப்பையையும், அதற்கு உதவுகின்ற நாலு கால் பிராணிகளையும், நிலத்துக்கு மழை பெய்விக்கின்ற வானத்தையும், நெற் கதிர்களுக்கு உயிர் தந்து வளர்க்கிற சூரியனையும், பயிருக்கு ஆகாத பூச்சிகளைக் கொத்தி எடுக்கும் பறவைகளையும் வணங்கி நன்றி செலுத்தும் ஒரு பண்டிகையே இந்தப் பொங்கல் பண்டிகை.

தமிழ்க் குலம் எத்தனையோ பல ஆண்டுகளாக மழையைத் தெய்வம் என்று வணங்கி, உழவின் பலனைத் தெய்வத்தின் பிரசாதம் என்றே பாவித்துப் பூஜித்து வருகிறது. ஆணும் பெண்ணும், பெரியோரும் சிறியோரும், படித்தவர்களும் படிக்காதவர்களும், மந்திரச் சடங்குகள் ஏதும் கலவாமலேயே, வீண் செலவுகளும் ஆடம்பரங்களும் இல்லாமல், நல்ல சுத்தமான எளிய முறையில் கொண்டாடுகிற பெரிய திருவிழா இது.

இத்தகைய புண்ணியப் பண்டிகை தினத்தில் நம்முடைய மக்களின் எதிர்காலம் செழிப்பாக அமைய வேண்டும் என்றும், தமிழ் நாட்டு மக்களின் உழவுத் தொழிலுக்கு மழைக் கடவுளின் பூரண ஆசி அதிகமும் குறைவும் இன்றி அளவோடு கிடைக்க வேண்டும் என்றும், தொழில்கள் எல்லாம் குறைவின்றி நடைபெற வேண்டும் என்றும் பிரார்த்தனை செய்வோமாக! செழிப்புக்கும் மகிழ்ச்சிக்கும் அடையாளமாகப் பால் பூரணமாய்ப் பொங்குமாக!

# மோசத்துக்குப் பயந்து......

ஈரோடு தறித் தொழிலாளர்கள் அங்க முத்து அவர்களும் இன்னும் பலரும், கைத் தறித் துணிக்கு உதவியாக இதுவரையில் தந்து வந்த ஸர்க்கார் 'ரிபேட்' முறையைக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு மட்டும் இனிமேல் கொடுப்பதாகவும் சாதாரண வியாபாரிகளுக்கு இனிமேல் கிடையாது என்றும் ஸர்க்காரின் அறிக்கை பிரசுரமாகி யிருப்பதைக் கண்டு, தீவிரமாக ஆட்சேபித்து எழுதியிருக்கிறார்கள். துஷ்பிரயோகம் அல்லது மோசம் எல்லா வியாபாரத்திலும் நடந்துதான் வருகிறது. மோசமும் திருட்டும் எந்த நிர்வாகத்திலுமே கலந்து வரும் கலியுகம் அல்லவா இது. இதற்குப் பயந்து, ரிபேட் - உதவி முறையைப் பெரும்பாலோருக்கு மறுத்து விட்டு ஸொஸைட்டிகளுக்கு மட்டும் கொடுப்பது நிர்வாக சாமர்த்தியம் ஆகாது. எந்த விதத்திலாவது யோசித்து ஆராய்ந்து மோசத்தைத் தடுக்கக்கூடிய முறையில் கட்டுப்பாடு செய்ய வேண்டுமே தவிர, கைத்தறி வியாபாரத்தில் பெரும் பாகமாகிய சொந்த வியாபாரிகளின் விற்பனைக்கு, உதவி இல்லை என்று சொல்லி விடுவது தர்மம் ஆகாது. கூட்டுறவு சங்கங்களுக்குப் பல விதத்தில் ஸர்க்கார் உதவி கிடைத்து வருகிறது. கூட்டுறவு நடைபெறுவதோடு அழகான கட்டடங்களும் மேலுக்கு மேல் கட்டி வருகிறார்கள். கூட்டுறவு நிர்வாக உத்தியோகஸ்தர்களுக்கும் சம்பளம் ஏறி வருகிறது. கைத்தறிக்கு என்று திட்டப்படுத்தி யிருக்கும் உதவி, தறிகாரர்களுக்குப் போய்ச் சேர வேண்டுமானால், கடையில் வாங்கும் கைத்தறித் துணிக்கும் மில் துணிக்கும் விலையில் வித்தியாசம் இருக்கக் கூடாது. சாத்தியமானால் கைத் தறித்துணி குறைந்த விலையில் இருக்கும்படி செய்யவேண்டும். மில் துணிக்கு, முக்கியமாகக் கைத்தறித் துணியோடு போட்டியிடும் மில் துணிக்கு, அதிலும் முக்கியமாகப் பெண்கள் உபயோகிக்கும் புடவை நிறுவகளுக்கு, மத்திய சர்க்காரே சரியான 'எக்ஸைஸ்' வரிபோட்டு வசூலித்து விட்டால், கைத்தறித் துணியோடு போட்டி போடுவதை நிறுத்தி விடலாம். இப்படிச் செய்து விட்டால் எந்தக் கடையிலும் கைத்தறித் துணி மில் துணியை விடக் குறைந்த விலைக்குக் கிடைக்கும்.

கூட்டுறவு சங்கங்களில் சேர்த்துக் கொள்ளப்பட்ட தறிகாரர்களுக்கு மட்டும் உதவியென்றும், அப்படிச் சேர முடியாதவர்களுக்குப் 'பட்ட காலிலே படும்' என்ற அநியாய விதியின்படி ரிபேட்-உதவியும் இல்லை என்று மறுப்பதும் கைத்தறி நிவாரணம் ஆகாது.

மில் துணிகளில், கைத்தறியோடு போட்டி போடும் நிறுவகளுக்கு கஜத்துக்கு இவ்வளவு 'எக்ஸைஸ்' வரி என்று திட்டப்படுத்தி விட்டு, கைத்தறிக்காரர்களுக்கு விற்பனை சௌகரியம் ஏற்படுத்தி விட்டால், நமது வர்த்தக இலாகா மந்திரி திரு கிருஷ்ணமாச்சாரியார் அவர்களுக்குத் தென்னாட்டு ஏழை நெசவாளர்கள் என்றும் கடமைப்பட்டவர் ஆவார்கள். நிர்வாகத்தில் ஏற்படும் மோசங்களுக்காக நாம் செய்யும் நல்ல காரியத்தை நிறுத்திவிட்டால், மதுவிலக்குத் திட்டமும் பாழாய்ப் போகும். கைத்தறித் திட்டமும் பயனற்றுப் போகும். மோசக்காரர்களுக்குத் தைரியமும் வெற்றியும் தந்ததாகும்!

# பாங்கி சிப்பந்திகளின் வேலை நிறுத்தம்

இந்தியாவில் உள்ள பாங்கி சிப்பந்திகளில் பெரும்பாலோர் தீர்மானித்திருந்தபடி இந்த மாதம் 6, 7 தேதிகளில் வேலை நிறுத்தம் செய்து முடித்து விட்டார்கள்.

கஜேந்திர கட்கார் கமிஷனின் தீர்ப்பைப் பாங்கி சிப்பந்திகள் முன்பு அங்கீகரித்திருந்தே, அவர்களின் பெரும்பாலான முக்கிய கோரிக்கைகளும் அங்கீகரிக்கப் பட்டு விட்டன என்பது வியக்தமாயிற்று. பின்னர் கமிஷனின் தீர்ப்பை அடிப்படையாகக் கொண்டு பார்லிமெண்டில் சட்டமும் நிறைவேறியது. எதிர்காலத்தில் ஏதாவது தகராறு ஏற்பட்டால், அதை மத்தியஸ்த நீதிச் சபையின் மூலம் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்பது சட்டத்தில் உள்ள ஷரத்தாகும். அப்படியிருக்க, பாங்கி சிப்பந்திகள் இப்போது ஏன் இந்த இரண்டு நாள் வேலை நிறுத்தத்தைக் கைக் கொண்டார்கள் என்பது தெரியவில்லை. இப்போது வேலை நிறுத்தத்தில் ஈடுபடுவது பார்லிமெண்டு சட்டத்துக்கு விரோதம் என்று உள்நாட்டு மந்திரி எச்சரித்தார். வேலை நிறுத்தம் வேண்டாம் என்று பண்டித நேருவும் கேட்டுக் கொண்டார். ஆனால் தேசத் தலைவர்களின் வார்த்தைகளுக்குச் செவி சாய்க்காமல் பாங்கிச் சிப்பந்திகள் தங்கள் பலத்தைக் காட்டுவதற்காக வேலை நிறுத்தம் செய்தது மிகவும் வருந்தத் தக்கதாகும். இத்தகைய வேலை நிறுத்தத்தில் அடிக்கடி ஈடுபடுவதால் பொதுஜனங்களின் அனுதாபத்தை இழக்க நேரிடும் என்பதையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

தொழிலாளிகள் முதலாளிகளோடு செய்யக்கூடிய போராட்டம் ஒரு வகை. சட்டத்தையும் சர்க்காரின் முடிவையும் எதிர்த்துப் போராடுவது வேறு வகையாகும். இப்போது நடந்த பாங்குத் தொழிலாளரின் வேலை நிறுத்தம் சட்டத்தை மறுத்ததாகும். சட்ட மறுப்பு எந்தச் சந்தர்ப்பத்தில் செய்ய வேண்டியது என்பது காந்தி சரித்திரத்தில் ஈடுபட்டவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். எது எவ்வாறாயினும், சமாதான முயற்சிகளை வரவேற்கிறோம்.

ஆடல் பாடல்

# ஆபாசக் கூத்துக்கு ஆர்ப்பாட்டமா?

**புதன்**

"அடாடா! பிரமாதம்" என்றார் ஒருவர்.

"என்ன கலை! என்ன ஆர்ட்!" என்றார் இன்னொருவர்.

"ஒன்டர்புல்!" என்றார் மூன்றாவது பேர்வழி.

இந்த மூவரும் ஆங்கில நாட்டிலேயே பிறந்து வளர்ந்தது போல், டைக்குள்ளேயே கழுத்தைக் கொடுத்துக் கொண்டு வலையவரும் தமிழர்கள்!

இவர்கள் இந்த மாதிரி ஓரேயடியாக வியந்தது எதை என்கிறீர்கள்! சமீபத்தில் அமெரிக்க நாட்டைச் சேர்ந்த மார்த்தா க்ரயாம் நடன கோஷ்டியார் நமது சென்னைப் பட்டணத்துக்கு வந்து, நாட்டிய நாடகம் என்று ஒன்று நடத்தினார்கள் அல்லவா, அதைத்தான்!

நடனம் என்ற பெயரில் என்னென்ன கூத்தெல்லாம் நடக்கிறது என்பதைப் பற்றி இந்த இதழின் இன்னொரு பக்கத்தில் ஒரு கடிதம் வட்ட மேஜையிலே வருகிறது. உடம்பின் கவர்ச்சி வனப்புகளைக் கலை என்ற பெயரில் விஷமத்தனமாக எடுத்துக் காட்டிக் கூத்தடிக்கிற ஆபாசங்களைக் கண்டு அநுபவ ஆதாரத்தோடு எழுதியுள்ள கடிதம் அது. நமது பண்பாடு இன்னும் தமிழ் நாட்டில் மறையாமல் இருந்து தான் வருகிறது என்பதற்கு இந்தக் கடிதம் ஒரு சான்று. என்றாலும், இந்தக் கூத்துக்களைப் பாராட்டுவதே தங்களுடைய கல்விக்கும் நாகரிகத்துக்கும் அடையாளம் என்று கருதி ஒரு சில ரசிகப் பெருமக்கள் "ஆ", "ஊ" என்று இந்தக் கேலிக் கூத்துக்களை வியந்தும் பாராட்டியும் வருகிறார்கள்!

பெண்மை என்ற பண்புக்குத் தலைவணங்கும் நாடு, நம்முடைய தமிழ் நாடு. பெண்களுக்கு உரிய பண்புகள் எவை, அந்தப் பண்புகளை நமது பெண்கள் எப்படிப் பாதுகாத்து வரவேண்டும், என்றெல்லாம் உயர்ந்த அறமுறைகளை வகுத்து அந்த அறமுறைகளைப் பாதுகாத்து வரும் நாடு, நமது தமிழ் நாடு. நம்முடைய நாகரிகமும், பண்பாடும் ஒழுக்கத்தை அடிப்படையாகக் கொண்டவை. நம்முடைய கலைகள் எல்லாம் பக்தியிலிருந்து மூளைத்தவை. சீலத்தையும் பண்பாட்டையும் வளர்க்கக்கூடிய முறையில் அமைக்கப்பட்டவை. இத்தகைய உன்னதமான சட்டதிட்டத்திலே பிறந்ததுதான், நம்முடைய பரத நாட்டியக் கலையும். இதையெல்லாம் மறந்து விட்டு, உடம்பின் புலனுணர்ச்சிகளைத் தூண்டுவதாகவும், ஆடையென்ற பெயரில் ஏதோ "உருவி"களை அணிந்தும் அணியாமலும் மேடைமேல் வந்து நின்று, நமது நாட்டு மக்கள்—ஆடவர் பெண்டிரின்—பார்வையே கூசும்படியான முறையில் குதிப்பது, மற்ற நாடுகளின் கலை முறைக்குப் பொருந்துமோ பொருந்தாதோ, நிச்சயம் தமிழ் நாட்டு மக்களின் நாகரிகத்துக்கும், பண்பாட்டுக்கும், முறைமைக்கும் இழுக்காகும். இதைக் 'கலை' என்றும், 'ஆர்ட்' என்றும் 'ஸிம்பாலிஸம்' என்றும் நம்முடைய பிரமுகர்களும் தாளம் தட்டுவது, வியப்பைத் தருவதோடு மனவேதனையையுமே தருகிறது.

"மாதர் தம்மை
இழிவுசெய்யும் மடமை!"

என்று கவியுலகிலே ஒரு மடமை இருக்குமானால் அது இதுதான். பெண்மையை இழிவு செய்யும் மடமைதான் இது. பசு தர்மக் கவர்ச்சியைக் காட்டுவதன் மூலந்தான் ஒரு கலை வளர வேண்டுமானால், அந்தக் கலை நமக்கு வேண்டாம். பக்தியிலும் சீலத்திலும் பண்பட்ட தமிழ் நாடும், தமிழ் மக்களும், இந்தக் கலையைக் காணச் சகியாமல் கண்களை மூடிக்கொள்ளவே செய்வார்கள். இவற்றைப் பாராட்டுகிற ஒரு சில மக்கள், அறியாமையினால் பாராட்டுகிறார்களா அல்லது தங்களுடைய உள்ளத்தின் விகார உணர்ச்சிகளை இப்படி வெளிப்படுத்துகிறார்களா, அல்லது இதைப் பாராட்டுவதுதான் நாகரிக வளர்ச்சி என்று கருதுகிறார்களா என்பது நமக்குத் தெரியவில்லை. எது எவ்வாறாயினும், கடல் கடந்து இப்படி ஒரு கோஷ்டி பரத நாட்டியக் கலை தோன்றிய புண்ணிய பூமிக்கு ஏன் வரவேண்டும்! அதற்கு என்ன அவசியம் இப்பொழுது நேர்ந்ததோ தெரியவில்லை. தமிழ்நாடு இத்தகைய கேலிக் கூத்துக்கா இடமாகவேண்டும்! நம்முடைய கலைஞர்களும் இதைப் பார்த்துப் படித்துக் கொள்ள வேண்டும் என்றோ, நமது கலைகளின் தரத்தையும் தாழ்த்தி இழிவு படுத்த வேண்டும் என்றோ கருதினால், நிச்சயம் நம்முடைய கலையன்பர்கள் இதற்கு இடம் கொடுக்கமாட்டார்கள். சிவனும் பார்வதியும் நடனப் போட்டியிலே ஈடுபட்டபோது, நடராஜப் பெருமான் ஆடிய ஊர்த்துவ தாண்டவத்தைப் பார்வதியும் ஆடினால், பெண்மையின் அங்கச் சிறப்புக்கு மாசு ஏற்படும் என்று கருதி அந்த நடனத்தை ஆடாமல் தோல்வியைத் தாங்கி நின்றாள் என்று ஒரு கதை. இந்தக் கதையினுள் ஒரு பயத்தை நம் முன்னோர்கள் பொதிந்து வைத்திருக்கிறார்கள். இந்த அருமையான கதை வழி வழியாக வழங்கிவருகிற தமிழ் நாட்டில் ஆபாசங்களைப் புகுத்த முயற்சிப்பது அறிவீனமாகும். மகத்தான பாபச் செயல் புரிகிறார்கள் என்றே கருதுகிறேன்.




## சென்னை நிதிமந்திரியின் கோரிக்கை

இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தின்படி சென்னை ராஜ்யத்துக்கு ஒதுக்கப்பட்டுள்ள ரூ. 170 கோடி மிகவும் குறைவு என்றும், சென்னையின் வருமான வசதிகளைக் கவனிக்கும் போது மேற்படி தொகை போதவே போதாது என்றும் சென்னை நிதிமந்திரி ஸ்ரீ சி. சுப்பிரமணியம் கூறியுள்ளார். அந்த உண்மையைச் சுட்டிக் காட்டித் திட்டக் கமிஷனுக்கு எழுதப் போவதாகவும் நிதிமந்திரி அறிவித்துள்ளார். இதைத் தவிர, சென்னை ராஜ்யத்தில் கனரகத் தொழிற்சாலைகளை ஏற்படுத்த வேண்டியது அத்தியாவசியம் என்றும் நிதிமந்திரி புது தில்லியில் நடந்த தேசிய அபிவிருத்திக் கவுன்சிலில் வற்புறுத்தியிருக்கிறார். பெரிய தொழிற்சாலைகள் வட இந்தியாவிலேயே அதிகமாக நிறுவப்படுகின்றன என்ற புகார் ஏற்கனவே இருந்து வருகிறது. இந்தப் புகாரில் உள்ள உண்மையையே சென்னை நிதிமந்திரியின் வார்த்தைகள் நிரூபிக்கின்றன. ஒவ்வொரு பிராந்தியத்திலும் தொழில் துறைகளின் அபிவிருத்திக்குப் பெரிய தொழிற்சாலைகள் அத்தியாவசியமானவை. எனவே, சென்னை ராஜ்ய மக்களின் அபிலாஷையைப் பிரதிபலிக்கும் ஸ்ரீ சுப்பிரமணியம் அவர்களின் கோரிக்கையை நிறைவேற்றுவதில் இந்திய சர்க்காரும் தேசிய அபிவிருத்தி சபையினரும் அக்கறை காட்டுவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

## பி. ஸி. ஜி யைப் பற்றி வில்லியம் ப்ரை

சமீபத்தில் அமெரிக்க நிபுணர் மற்றொருவர் இந்தியாவுக்கு வந்து பி. ஸி. ஜி ஊசிக் குத்தக்கு விசேஷ அபிப்பிராயம் தந்து நம்முடைய ஆரோக்கிய மந்திரியின் பிடிவாதத்தை எதிர்க்கும் ராஜாஜிக்குச் சாதகமாகப் பேசிவிட்டார். இது நம்முடைய அரசாங்கத்துக்கு மகிழ்ச்சி தராது. இந்த அமெரிக்க நிபுணர்கள் ஏன் நம் நாட்டுக்கு வந்து நாம் செய்யும் காரியத்துக்குப் பங்கம் விளைக்கிறார்கள் என்று கோபித்துக் கொள்ளலாம். ஆனால் பொது மக்களுக்கு இந்த அமெரிக்க நிபுணருடைய அறிக்கை திருப்தி அளித்திருக்கும். இன்னும் பரீட்சை செய்து கொண்டிருக்கிறோம் என்கிறார்கள் அமெரிக்க நிபுணர்கள். பி. ஸி. ஜி ஊசி குத்துவதால் பயனுண்டு என்பதை அவர்கள் இன்னும் ஒப்புக் கொள்ளவில்லை என்கிறார்கள். அமெரிக்க நிபுணர்களுக்கு ஒன்றும் தெரியாது, நாம் குத்திக் கொண்டே போவோம் என்கிறார்கள் இந்திய இலாகாவின் உபதேச நிபுணர்கள்!

## நிர்வாகத்தில் தொடர்பு

ஒரு அதிசயம். ஓர் அற்புதம் நிகழ்ந்திருக்கிறது! வான் முகடு மட்டும் துள்ளிக் குதித்துக் களிக் கூத்து ஆட வேண்டிய ஓர் நிகழ்ச்சி நடைபெற்று விட்டது! ஆம், பாரத நாட்டிலேயே மிகப் பெரிய முதலாளிகளான டாடா ஐர்ன் அண்டு ஸ்டீல் கம்பெனியாருக்கும், அவர்கள் தொழிலாளருக்கும் ஓர் அற்புதமான உடன்படிக்கை கையெழுத்தாகியிருக்கிறது. அதாவது தொழிலாளருக்கு இனி அந்தத் தொழிற்சாலையின் நிர்வாகத்தில் உரிமை யுண்டு. இதனால் முதலாளி தொழிலாளி என்று இரு தரப்பாரிடையே இருந்த பெரிய மதிற் சுவர் அகன்று விட்டதுடன் தொழிலாளர் பல நலன்கள் பெற்று, தேசத்தின் தொழில் வளம் பெருகப் பெரிதும் வழி ஏற்பட்டிருக்கிறது. ஜாம்ஷெட்பூர் டாடா தொழிற்சாலையின் நிர்வாகிகள் செய்துள்ள இந்த மகத்தான ஏற்பாட்டின் பலனைப் பல தொழில் தகராறுகள் அறவே நீங்க வழி ஏற்படுவதுடன் தேசத்தின் தொழில் வளர்ச்சி எவ்விதத் தடையுமின்றி வேகமாக முன்னேறும் என்று எதிர்பார்க்கலாம்.

இத்துறையில் தேசத்தின் பிரபல டாடா அதிபர்கள் வழி காட்டியதற்கு அவர்களைப் பாராட்டுகிறோம்!

## கவர்னருக்குச் செய்யக்கூடிய உதவி!

விந்தியப் பிரதேசத்துக்குக் கவர்னராக நியமனம் ஆகிச் செல்லும் ஸ்ரீ திருமல் ராவுக்கு அளிக்கப்பட்ட விருந்திலே ராஜாஜி கவர்னர் உத்தியோகத்தைப் பற்றி ஒரு ரஸமான கருத்து கூறியிருக்கிறார்.

கவர்னர் உத்தியோகம் முதன் மந்திரி உத்தியோகத்தைவிடக் கஷ்டம். ஏனென்றால் முதன் மந்திரிகள் தத்தம் வேலைகளைச் செய்ய வேண்டியதிருக்க, கவர்னர் தன்னுடைய வேலைகள் என்ன என்று கண்டு பிடித்து அவற்றைச் செய்ய வேண்டியிருக்கிறது என்று ராஜாஜி குறிப்பிட்டிருக்கிறார்.

# கிரிக்கெட் மைதானத்தில்!




தமிழகம் தொழில் துறையில் மிகவும் பின்தங்கியிருப்பதால் இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் சென்னைக்கு ஒதுக்கப்பட்ட நிதியில் ஏதும் குறைக்கக் கூடாது என்று தில்லியில் நிதி மந்திரி வற்புறுத்திப் பேசிவிட்டு வந்திருக்கிறார்.

◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇◇

கவர்னராகவும், முதன் மந்திரியாகவும் பதவிகள் வகித்துத் தாம் பெற்ற அநுபவத்திலிருந்து ஒரு பேருண்மையை ராஜாஜி எடுத்துச் சொல்லியிருக்கிறார்.

"கவர்னருக்கு எவ்வித உதவி செய்வதற்கும் அதிகாரம் இல்லை என்று நினைப்பது பிசகு. உண்மையில் கவர்னரால் செய்யக் கூடிய காரியங்கள் பல. ஒரு கவர்னரிடம் லைசென்ஸுக்கோ உத்தியோகத்துக்கோ பெர்மிட்டுக்கோ உதவி பெறுவதற்காகப் போனால் அவர் தம்மால் ஒன்றும் செய்வதற்கில்லை என்று சொல்லித் தப்பித்துக் கொள்ள நேருகிறது. இதை மனத்தில் வைத்துக் கொண்டு உதவிக்குப் போகாமல் இருப்பது ஒன்றே கவர்னர்களுக்கு நாம் செய்யும் உதவி" என்று கூறியிருக்கிறார் ராஜாஜி.

புதிதாக நியமனம் பெற்ற ஸ்ரீ திருமல் ராவ், இதுவரை அந்தஸ்தானத்தில் இருந்து விந்தியப் பிரதேச மக்களின் அன்பைப் பெற்ற ஸ்ரீ சந்தானம் அவர்களைப்போலவே மக்களின் அன்புக்குப் பாத்திரமாவார் என்று எதிர்பார்க்கிறோம். ஓய்வு பெற்றுத் தமிழ் நாடு திரும்பும் பழைய கவர்னர் சந்தானம் அவர்களுக்கு நல்வரவு கூறி வரவேற்கிறோம்.

# மொழி ஆதிக்கம் ஒழிக

பிப்ரவரி மாதம் 20-ம் தேதி! இலங்கை முழுவதிலுமுள்ள தமிழ் பேசும் மக்கள் அனைவரும் சர்வ சிங்கள ஆதிக்கத்தை எதிர்க்க ஒரு நாள் சத்தியாக்கிரகம் செய்ய வேண்டுமென்றும் அன்றைய தினமே "தமிழ் விடுதலை இயக்கம்" ஒன்று நாடு பூராவும் ஆரம்பிக்கப்படவேண்டுமென்றும் தமிழ் அரசுக் கட்சித் தலைவர்கள் ஒரு வேண்டுகோள் விடுத்திருக்கிறார்கள். தமிழர் கடைகள், தொழில் ஸ்தாபனங்கள், பள்ளிக்கூடங்கள், பல் கம்பெனிகள், ஓட்டல்கள், அரசாங்க ஊழியர்கள் முதலான சகல தமிழர்களும் சத்தியாக்கிரகத்தில் சேர்ந்து அதை வெற்றிகரமாக நடத்திவைக்க வேண்டுமென்று தமிழ் அரசுக் கட்சித் தலைவர்கள் கேட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

தமிழை ஒதுக்கிச் சிங்களத்தை மட்டும் ராஜாங்க பாஷையாக்கும் தீர்மானத்தை பிப்ரவரி 19-ம் தேதி சர்க்கார் கட்சியான



## இலக்கிய விருந்து

வங்கம் உலக மகாகவிகளில் ஒருவராகப் போற்றிப் பாராட்டும் தாகூரைப் பெற்றெடுத்தது; தேச பக்திக் கனலை மூட்டிய வீரர் சுபாஷைப் பாரத நாட்டுக்கு வழங்கியது; பாரதத்தின் பெருமையை உலகறியச் செய்த விவேகானந்தரை ஈன்றெடுத்தது; பக்திச் செல்வத்தைப் பரப்பிய பரமஹம்ஸரைப் பாருக்கு அளித்தது. இத்தகைய புகழ்பெற்ற வங்க நாட்டின் இலக்கியப் பிரதிநிதிகள் சென்னையில் மகாநாடு கூட்டினார்கள்; வங்க இலக்கியத்தின் பெருமையை எடுத்துரைத்தார்கள்.

தமிழ்நாட்டுக்கு வந்துள்ள வங்க இலக்கியப் பிரதிநிதிகளைத் தமிழ் எழுத்தாளர் சங்கம் ஜனவரி 3-ந் தேதி பாராட்டிக் கௌரவித்தது. இளம் பிறைச் சங்கக் கட்டடத்தில் நிகழ்ந்த இப் பாராட்டு விழாவுக்கு ஆனந்தவிகடன் நிர்வாக ஆசிரியரும், தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் தலைவருமான ஆர். மகாதேவன் தலைமை வகித்துப் பேசினார். மேலும் திரு ம. பொ. சிவஞான கிராமணியார், திரு கி. வா. ஜகந்நாதன், திரு எஸ். ஏ. பி. அண்ணாமலை, திரு நாரண துரைக்கண்ணன், திரு உமாபதி, ஸ்ரீமதி குகப்ரியை முதலியோர் வங்க இலக்கிய கர்த்தாக்களின் பெருமையைப் பாராட்டிப் பேசினார்கள்.

வங்க இலக்கிய கர்த்தாக்களின் பிரதிநிதியான திரு தேபேஷ் தாஸ் ஐ. ஸி. எஸ். பாராட்டுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டார். வங்க இலக்கிய ஆசிரியர்கள் திரு உபேந்திரநாத் கங்குலி, ஜோகேன் குப்தா, திரு விவேகானந்த முக்கர்ஜி, திரு நரேந்திர தேவா, திருமதி ராதாராணி தேவி முதலியவர்களைத் திரு தேபேஷ்தாஸ் தமிழ்ப் பத்திரிகையாளருக்கு அறிமுகப் படுத்தினார்.

பிறகு, எழுத்தாளர் சங்கத் தலைவர் வங்க இலக்கியப் பிரதிநிதிகளுக்கு 'நியூ உட்லண்ட்ஸ்' ஹோட்டலில் விருந்துபசாரம் நிகழ்த்தினார். இத்தகைய இலக்கிய நட்புறவினால் இனி வங்க மொழிக்கும் தமிழ் மொழிக்கும் இலக்கியப் பரிவர்த்தனை நடைபெறும் என்பதில் ஐயமில்லை.

---

ஐக்கிய தேசியக் கட்சி நிறைவேற்ற விருக்கின்றது. இந்தத் தீர்மானத்துக்கு ஆட்சேபணை தெரிவிக்கும் முறையிலேயே 20-ம் தேதி நாடு முழுவதும் சத்தியாக்கிரகம் நடத்தத் திட்டமிடப்பட்டு வருகிறது. இந்த சத்தியாக்கிரகம் தமிழ் பேசும் ஜனங்களுக்கிடையில் அவர்களுக்கு ஏற்பட விருக்கும் ஆபத்தை உணர்த்தி விழிப்பு உணர்ச்சியை ஏற்படுத்த உதவுமென்றும் தமிழ் அரசுக் கட்சித் தலைவர்கள் கருதுகிறார்கள்.

* * *

இலங்கைக்கு விஜயம் செய்திருக்கும் சென்னைச் சட்ட சபை அங்கத்தினரான திரு எம். எஸ். செல்வராஜன் இவ்வாரம் கொழும்பு விவேகானந்த சபை மண்டபத்தில் நடைபெற்ற ஒரு பொதுக் கூட்டத்தில் பேசிய பொழுது ஒரு முக்கியமான உண்மையை எடுத்துச் சொன்னார். 'பிரிட்டிஷாரை இந்தியா வெளியேற்றியது நியாயமாயிருந்தால் இந்தியர்களையும் இலங்கை வெளியேற்ற விரும்புவதில் என்ன தவறு இருக்கிறது!' என்று சிங்களத் தீவிரவாதிகள் அடிக்கடி கேட்கிறார்கள். இது எவ்வளவு அபத்தமான உதாரணம் என்பதை ஸ்ரீ செல்வராஜன் சுட்டிக் காட்டி, "இந்தியாவிலிருந்து பிரிட்டிஷ் ஆட்சியை நாங்கள் வெளியேற்றினோமே தவிர பிரிட்டிஷ்காரர்களை யல்ல. எவ்வளவோ பிரிட்டிஷ் ஜனங்கள் இந்தியாவில் இன்னுமிருக்கிறார்கள். அவர்களை இந்தியா வெளியேறச் சொல்லவுமில்லை; அவர்களிடம் இந்தியப் பொது ஜனங்கள் துவேஷ மனப்பான்மை காட்டவுமில்லை. இலங்கையில் நிலைமை இப்படியா இருக்கிறது! பார்த்த இடமெல்லாம் இந்தியத் துவேஷம் தலைவிரித்தாடுகிறது. இந்தியர்களை மூட்டை கட்டி யனுப்பத் தீவிரமான முயற்சிகள் நடக்கின்றன" என்றார்.

இலங்கை எவ்வளவு ஆத்திரமூட்டியும் இந்தியா பொறுமையும் நிதானமும் காட்டுவதையும் ஐ. நா. சபையில் இலங்கையை அங்கத்தினராகச் சேர்க்க இந்தியா அதிதீவிரமாக முயற்சி செய்து உதவியதையும் ஸ்ரீ செல்வராஜன் அழகாக எடுத்துச் சொல்லி, "சத்தியம் ஜயிக்கும்" என்றார். —ரஜனி

# கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி நினைவுச் சிறுகதைப் போட்டி

## மூன்றாவது பரிசுக் கதை. 5

இரவு எட்டு மணி இருக்கும். பிரபல பண்ணையார் பரமசிவம் கட்டிலில் படுத்துக்கொண்டிருந்தார். எதையோ நினைத்துக்கொண்டு அவருடைய மனம் ஆழ்ந்த யோசனையில் இருந்தது. இன்னும் ஒரு நாளோ! இரண்டு நாட்களோ! பிறகு...பிறகு என்ன! பரமசிவத்துக்கும் இந்தப் பரந்த உலகத்துக்கும் இடையேயுள்ள தொடர்பு அறுந்துவிடும். அறுந்து விடுமென்றால்......ஆமாம், அவர் இறக்க வேண்டியவர்தானே! இறக்க வேண்டியவரா! ஐயோ! அன்புடைய மனைவி, இன்பத்தை அள்ளிச் சொரியும் மக்கள், ஏராளமான சொத்து இவைகளெல்லாம் விட்டுவிட்டா! முடியாது. நான் ஏன் இறக்க வேண்டும்! ஏன் இறக்க வேண்டுமா!

நன்றாக இருக்கிறது. நீ எப்பொழுது இந்த உலகத்தில் பிறந்தாயோ, இறப்பு என்பதும் உன் கூடப் பின்தொடர்ந்தல்லவா வருகிறது. அப்பப்பா! என்ன பயங்கரம்! அறுபது வருடங்களாக வாழ்ந்து வந்த இந்த உலகத்தையே விட்டு இரண்டு நாட்களுக்குள் பிரியவேண்டுமென்றால் யார்தான் விரும்புவார்கள்! நம்முடைய விருப்பப்படியா இறைவன் படைக்கின்றான்! ஏதோ விளையாட்டாக மனிதனை உலகத்தில் வாழவிட்டு, மனைவி மக்கள் என்ற பொருளைக் காட்டி அறிவை மயக்கிக் கடைசியில் இருந்த இடம் தெரியாமல் போகச் செய்கிறான். எல்லாம் அவன் செயல். வேறு வழியில்லை! காலதேவனின் வரவைக் கட்டாயம் எதிர் பார்த்துக்கொண்டே இருக்க வேண்டியதுதான். தனக்




ஆ. நா. ஐயராமன்

# பண்ணையார் மகன்

குப் பிறகு மனைவி மக்கள் கஷ்டப்பட வேண்டியதில்லை. ஏராளமான சொத்தை அவரவர்கள் இஷ்டப்படி பங்கிடு செய்தாகி விட்டது. ஆனால் தன்னுடைய சுய சம்பாத்தியமான சொத்துக்களைப் பற்றி முடிவு செய்தது சரியா......! அந்த விஷயம்தான் அவருடைய மனத்தை வாட்டி யெடுத்தது.

இப்படிப் பலவாறு எண்ணிக் கொண்டிருந்த பரமசிவத்துக்கு, "சாமி" என்ற பழக்கமான குரல் அந்த நிசப்தமான அறையில் வெகு துல்லியமாகக் கேட்டது.

"யாரது! எங்கேயோ கேட்ட குரல் போலிருக்கிறதே" என்று பரமசிவம் திரும்பிப் பார்த்தார். யாரையும் காணோம். என்ன ஒருவருமில்லையா! எப்படிச் "சாமி" என்ற சத்தம் வந்தது!" என்று பரமசிவம் ஒன்றும் புரிந்து கொள்ள முடியாமல் இருந்தார். ஐந்து நிமிடங்கள் கழிந்தன. மறுபடியும் அதே குரல் 'சாமி' என்று கூப்பிட்டது. இப்போது பரமசிவம் திகிலுடன் பார்த்தார். என்னது மறுபடியும் சாமியா! யாரது கூப்பிடுவது!

"சாமி என்னைத் தெரியலிங்களா! நான்தான் பூவாயி."

"ஹா! பூவாயியா! நீ எப்படி இங்கு வந்தே!" என்று ஆச்சரியத்துடன் கேட்டுக் கொண்டே குரல் வந்த திக்கை அவர் நோக்கினார்.

ஆமாம். பூவாயியேதான். முப்பது வருடங்களுக்கு முன்னால் பார்த்த அதே பூவாயிதான். ஆனால் அவள் தான் இறந்து விட்டாளே! மறுபடியும் எப்படி வந்தாள்! சிறிது நேரம் அவளையே உற்றுப் பார்த்தார். அதே புன்சிரிப்பு. முத்துப் போன்ற வெண்ணிறப் பற்கள். துவண்டு விழுவது போலிருக்கும் இடை. அந்தச் சிவப்புச் சாயப் புடவை. இவையெல்லாம் முப்பது வருடங்களுக்கு முன்னால், பூங்கொடி போல் பரமசிவத்தை மயக்கிய பூவாயிதான் என்று அவருக்கு ஞாபகப்படுத்தின.

வியப்பு மேலிட, ஒய்யாரமாக நிற்கும் பூவாயியைப் பார்த்த பரமசிவம், "பூவாயி, இங்கே வா! அம்மா வா" என்று கூப்பிட்டார். ஆனால் பூவாயி அருகில் நெருங்காமல் தூரத்திலேயே நின்றுகொண்டிருந்தாள்.



"என்ன வரமாட்டாயா! என் மேல் கோபமா!" என்று கேட்டுக் கொண்டே பரமசிவம் எழுந்து உட்கார முயன்றார். என்ன அதிசயம்! இவ்வளவு நேரம் புன்முறுவலுடன் காட்சியளித்த பூவாயி எப்படியோ மாயமாக மறைந்து விட்டாள். மறைந்து விட்டாளா! நான் கண்டதெல்லாம் கனவுதானா! இனி மேல் அவளைப் பார்க்கவே முடியாதா! 'நீயே இன்னும் இரண்டு நாட்கள்தான் இருக்கப் போகிறாய்! அவளை எங்கே பார்ப்பது! ஒரு வேளை மேல் உலகத்தில் இறந்தவர்களைப் பார்க்க முடியுமென்று சொல்லுகிறார்களே, அதுபோல் நீயும் இறந்தவுடன் பூவாயியைச் சந்தித்தாலும் சந்திக்கலாம்' என்று அவர் மனம் கூறியது. மாலையில் வந்து பார்த்துப் போன வைத்தியர் தன்னுடைய உயிர் நாடியைப் பற்றிச் சொன்னதும், பூவாயியைப் பற்றிய எண்ணங்களும் ஒன்றன் பின் ஒன்றாக வந்து அலைபோல் மோதின. பூவாயியைப் பற்றி நினைக்கும் போதெல்லாம் பரமசிவத்தின் கண்களில் ஜலம் ததும்பியது. அவளுக்கு இழைத்த தீங்கைப் பற்றி எண்ணும் போது அவருடைய உடம்பெல்லாம் நடுங்கியது. முப்பது வருடங்களுக்கு முன்னால்…………

* * *

வளவனூர் களத்து மேடு. பண்ணையார் பரமசிவம் வெகு மும்முரமாக ஆட்களை வேலை வாங்கிக் கொண்டிருக்கிறார். இளமையின் மிடுக்கு பரமசிவத்திடம் துள்ளி விளையாடியது. அங்குமிங்கும் அலைந்தவண்ணமாகவே இருக்கிறாரே! ஒரு நிமிடமாவது வேலையில்லாமல் இருப்பதில்லையே! இதோ போரடிக்கும் ஆட்களுக்கு ஏதோ உத்தரவு கொடுத்துக் கொண்டிருக்கிறார்.

அறுவடை காலமாதலால் பரமசிவத்தின் களத்து மேடு கலகலப்பாக இருந்தது. ஒரு பக்கத்தில் கட்டுக் கட்டாகக் குவித்து வைக்கப்பட்டிருக்கும் நெற் கதிர்களை, நெல் வேறு வைக்கோல் வேறாக அடித்துக் கொண்டிருந்தனர். மற்றொரு பக்கம் வயல்களில் அறுத்துப் போடும் நெற்கதிர்களைப் பெண்கள் கட்டுகளாகக் கட்டித் தலையில் தூக்கி வரும் காட்சி. நான்கு பக்கமும் வயல்கள், நடுவிலேதான் களத்து மேடு. அங்கு நின்று கொண்டு பரமசிவம் சுற்றிப் பார்த்தால் வேலை செய்பவர்களை நன்றாகக் கவனிக்க முடியும்.

பறவைகள் கூட்டம் போல் இஷ்டப்படி சிரித்துப் பேசிக் கொண்டே நடந்து வரும் பெண்கள் கூட்டத்தைக் கவனித்த பரமசிவம் கோபத்துடன், "இந்தா என்ன புள்ளே! பேசிப் பேசிப் பொழுதைக் கழிச்சிடுவீங்க போலிருக்கே! சுருசுருப்பா நடவுங்க" என்று அதட்டினார்.

அந்தக் கூட்டத்தில் ராஜாத்தி போலிருக்கும் பூவாயியை அப்போதுதான் பரமசிவம் பார்த்தார். மருட்சி பொருந்திய கண்களுடன் பழுத்த மாவிலையின் நிறத்தை ஒத்திருந்த பூவாயியைக் கண்டதும் பரமசிவம் குரலைத் தாழ்த்திக் கொண்டார்.

பரமசிவத்தின் கண்கள் பூவாயியைச் சுற்றியே வட்டமிட்டுக் கொண்டிருந்தன. ஆஹா! என்ன அழகு! யார் இந்தப் பூவாயி! இத்தனை நாட்களாகக் கண்ணில் தென்படவில்லையே! புதிதாகச் சேர்ந்தவளோ! ஆனால் யாரைக் கேட்பது! எப்படியாவது அவளைப் பற்றி அறிய வேண்டுமென்று பரமசிவத்தின் உள்ளம் துடித்தது.

என்ன! அவளைப்பற்றி அறிவதா! அவளுக்கும் நமக்கும் என்ன சம்பந்தம்! சேச்சே. என்ன முட்டாள்தனம். மணமான பிறகு மற்றொரு பெண்ணைப் பற்றித் தெரிந்து கொள்ள முயல்வது சரியாகுமோ! என்று பரமசிவத்தின் நேர்மையுள்ளம் எண்ணியது. அப்புறம் சீதா என்ன நினைப்பாள்! சீதா பரமசிவத்தின் மனைவி. தலைச்சன் பிரசவத்துக்காக நான்கு மாதங்கள் முன்னதாகவே பிறந்தகம் சென்றிருந்தாள். பரமசிவத்தின் மனத்துக்குச் சீதா ரம்பையாகத்தான் காட்சியளித்தாள். ஆனால் தற்சமயம் அவள்தான் இங்கு இல்லையே! அதற்காக……பரமசிவம் குழப்பத்துடன் ஒன்றும் புரியாமல் தவித்தார்.

எவ்வளவுதான் கஷ்டப்படுத்தி முயன்றாலும் பரமசிவத்தின் கண்கள் பூவாயியைச் சுற்றியே வளைய வந்தன. அவளுடைய அங்க அசைவுகளையும், குனிந்து நிமிரும்போது ஏற்படும் மாறுதல்களையும் கண்டு பரமசிவத்துக்கு உடம்பில் புல்லரிப்பு ஏற்பட்டது.

சூரியன் மலைவாயிலில் விழுந்ததைக் கூடப் பரமசிவம் உணரவில்லை. கூலியைப் பெற்றுக் கொண்டு அவரவர்கள் வீடு திரும்பலானார்கள். சித்தப்பிரமை பிடித்தவர் போல் பரமசிவம் வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தார். சந்தைக் கடை இரைச்சலைப் போலிருந்த களத்துமேட்டில் நிலவிய பயங்கரமான அமைதி பரமசிவத்தைச் சுய உணர்வுக்கு இழுத்து வந்தது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தவுடன் களத்துமேடு காலியாயிருப்பதை உணர்ந்தார். ஆனால் ஒரு மூலையில் பூவாயி மட்டும் கீழே விழுந்து கிடந்த தானியங்களைப் பொறுக்கிக் கொண்டிருந்தாள். பூவாயி தனியாக இருப்பதைக் கண்டதும் பரமசிவத்தின் மனம் வீட்டுக்குப் புறப்படுவதா வேண்டாமா என்று அலைபாய்ந்து கொண்டிருந்தது. அதோ பூவாயி கூடக் கிளம்பி விட்டாள். அடடா! அவள் போய் விட்டால்... ...போனால் போகட்டுமே! இதோ பரமசிவத்தை நெருங்கிக் கொண்டே வருகின்றாள். ஆனால்......ஆனால் என்ன! அவரைத் தாண்டிச் சென்று கொண்டிருக்கிறாளே! அவளைக் கூப்பிடலாமா!

இனிமேல் தாமதித்தால் வெகு தூரம் சென்று விடுவாள். அதற்குள் எப்படியாவது கூப்பிட்டுவிட வேண்டும். மிகுந்த கஷ்டத்துடன் 'பூவாயி' என்று கூப்பிட்டு விட்டார். தன் பெயரைச் சொல்லி யழைப்பதைக் கேட்டவுடன் பூவாயி திரும்பிப் பார்த்தாள். கொஞ்ச தூரத்தில் தன்னையே பார்த்துக் கொண்டிருந்த பரமசிவத்தைக் கண்டதும் பூவாயிக்கு ஒரே வியப்பாயிருந்தது. என்னது, இவரா கூப்பிட்டது! சிறிது தயங்கியபடியே பரமசிவத்தை நோக்கிச் சென்றாள்.

"ஏன் சாமி, கூப்பிட்டீங்களா!"

"ஹும்......இல்லை........வீட்டுக்குக் கிளம்பிட்டியா!"

"ஆமாமுங்க, நேரமாயிருச்சு!"

"நீ புதுசா வேலையில் சேர்ந்திருக்கியா! உன்னை இத்தனை நாளா பார்க்கவே யில்லையே! ஆனால் உம் பேருமட்டும் பூவாயின்னு வேலைக்காரங்க கூப்பிட்டதிலிருந்து தெரிந்தது."

"புதுசுதானுங்க. வந்து சேர்ந்து ஒரு வாரந்தான் ஆவுது."

பூவாயி நின்றபடியே இருந்தாள். பரமசிவமும் பூவாயியைப் பார்த்துக் கொண்டே இருந்தார். திடீரென்று பூவாயி, "நேரமாயிடுச்சுங்க, நான் வீட்டுக்குப் போகிறேனுங்க" என்று பரமசிவத்தின் மௌனத்தைக் கலைத்தாள்.

"சரி, ஹும். இங்கே ஏதோ நெல்லு கொஞ்சம் பாக்கியிருக்காப் போலிருக்கு. அதையும் எடுத்துக்கிட்டுப் போ" என்று பரமசிவம் பக்கத்தில் கட்டி வைத்திருந்த நெல்லு மூட்டையைக் காண்பித்தார்.

பூவாயி தலையிலிருந்த பாரத்தை இறக்கி வைத்து விட்டு, நெல்லு மூட்டையைத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்டாள். மறுபடியும் கீழே வைத்த பாரத்தை அவளால் குனிந்து எடுக்க முடியவில்லை. குனிந்தால் தலையிலிருக்கும் பாரம் நிற்காது. சிறிது நேரம் பேசாமல் நின்றாள். தயங்கி நின்ற பூவாயியைக் கண்டதும் உடனே பரமசிவம் கீழேயிருந்த பாரத்தை எடுத்துப் பூவாயியின் இடுப்பில் வைத்தார். பூவாயியின் கைகள் பரமசிவத்தின்மேல் பட்டு விட்டன. பரமசிவத்தின் உடம்பில் உணர்ச்சி கட்டுக்கடங்காமல் மின்சார வேகத்தில் ஓடியது. அத்துடன் வெறியும் கலந்து மிருகமாகக்கூட மாற்றி விட்டது.

அன்று ஏற்பட்ட பழக்கத்துக்குப் பிறகு என்னவெல்லாமோ நடந்து விட்டது. முதலில் பாவமென்று கருதிய பரமசிவத்துக்குப் போகப் போக மிகவும் சாதாரணமாகப் பட்டது. களத்து மேட்டுக்கு வந்தவுடனேயே பூவாயி வந்து விட்டாளா என்றுதான் முதலில் கவனிப்பார். இப்பொழுது அவருக்குத் தன்னுடைய மனைவி சீதாவைப் பற்றியோ அல்லது பிறக்கப் போகும் குழந்தையைப் பற்றியோ சிறிதேனும் நினைக்க முடியவில்லை. பூவாயிதான் தன்னுடைய சொந்த மனைவி என்ற எண்ணம் போலிருக்கிறது.

* * *

இப்படியே இரண்டு மாதங்கள் உருண்டோடி விட்டன. ஆனால் இப்பொழுதெல்லாம் பூவாயி கண்ணில் தென்படுவதில்லை. வேலைக்கும் வருவதில்லை. பரமசிவத்தின் மனம் அவளைப் பற்றி விசாரிக்க ஆவலாய்த் துடிக்கும். யாரைக் கேட்பது! மற்ற வேலையாட்களைக் கேட்டு அவர்கள் ஏதாவது வித்தியாசமாக நினைத்துக் கொண்டால் ...... மேற்கொண்டு பூவாயியைப் பற்றி என்னுவதற்குள், சீதா தங்க விக்கிரகம்போன்ற ஆண் குழந்தையுடன் புக்ககம் திரும்பி விட்டாள்.

( அடுத்த இதழில் முடியும் )

## இன்புறு நாளிதுவே!

தேவாஜி

அன்பர் அரங்கம்சூழ்வ முடன்விழைந்
தின்புறு நாளிது வே!
இன்பந லங்கள் ஈச னிடம் கரைந்
துன்னிடும் நாளிது வே!

உன்னதம் கண்டுநல் ஊழ்வினை கொண்டு உ
யர்ந்திடும் நாளிது வே
என்மனம் விண்ணிடை ஏறிந டம்செய
ஐம்புலன் நாடிடு தே!

அறிவுவி தையினை ஆக்கவ யலினில்
இடும் வகை கண்டு கொண்டோம்!
இறைவனரு ட்கதிர் வீசமொ ளியினில்
உழு பணி கண்டு கொண்டோம்!

உறுதி யுழைப்பு நல் லூக்கமி வைதரும்
எழிலுறு சோலை கண்டோம்!
செறிவு குலுங் கிடு சிந்தையில் தேமலர்ச்
செங்கனி யாடல் கண்டோம்!

# ஆற்றங் கரையினிலே



## பேராசிரியர் ரா. பி. சேதுப்பிள்ளை

### 53. பாவைப் பாட்டு

மழை காலம் கழிந்தது; மார்கழி பிறந்தது. பனி நடுக்குமே என்று பதுங்காமல், விடியற் காலத்தில் பறவைகள் எழுந்து பாட்டிசைத்தன. திருக் கோயில்களில் காலைச் சங்கம் முழங்கிற்று. இன்னிசை வீணையர் ஒருபால்; சென்னியில் அஞ்சலி கூப்பினர் ஒருபால் நின்று செஞ்சொற் கவி பாடினர்.

"கூவின பூங்குயில் கூவின கோழி
குருகுகள் இயம்பின இயம்பின சங்கம்
யாவரும் அறிவரி யாய்எமக் கெளியாய்
எம்பெரு மான்பள்ளி எழுந்தரு ளாயே"

(குருகு - பறவை)

என்ற அடியார் குரல் எங்கும் பரந்து நிறைந்தது.

இத்தகைய இனிய காலைப் பொழுதில் குளிர்ந்த நீராடப் புறப்பட்டனர் இளங் கன்னியர். வீதியில் உள்ள வீடுதோறும் சென்று எழுந்திராத தோழியரைத் துயி லுணர்த்தினர்.

"புள்ளும் சிலம்பினகாண்
புள்ளரையன் கோயிலில்
வெள்ளை விளிசங்கின்
பேரரவம் கேட்டிலையோ
பிள்ளாய் எழுந்திராய்"

(சிலம்பின - ஒலித்தன; புள்ளரையன் - கருடன்; விளி - அழைக்கும்; பேரரவம்- பெரு முழக்கம்)

என்று இசையினும் இனிய குரல் கொடுத்து அழைத்தனர். அப்போது பள்ளியை விட்டு எழுந்து வந்தார் சில பாவையர். மற்றும் சிலர் கதவைத் திறவாமல் கடுந் துயிலில் ஆழ்ந்திருந்தார். அவரிடமும் பரிவு கூர்ந்து "ஐயோ! இப்படியும் உறங்குவார் உண்டோ? கதவைத் தட்டினோம்! கையைக் கொட்டினோம்! பாடினோம்! ஆடினோம்! ஒன்றும் பயனில்லையே!

"கூற்றத்தின் வாய்வீழ்ந்த
கும்ப கருணனும்
தோற்றும் உனக்கே
பெருந்துயில்தான் தந்தானோ
ஆற்ற அனந்தல்
உடையாய், அருங்கலமே
தேற்றமாய் வந்து
திறவேலோர் எம்பாவாய்"

(கூற்றம் - காலன்; துயில் - தூக்கம்; அனந்தல் - தூக்கம்; தேற்றம் - தெளிவு)

"அம்மா! தோழீ! அரக்கனாகிய கும்ப கர்ணனிடம் நீ உறக்கம் பயின்றாயோ? அவன் இறக்கும் பொழுது உறக்கத்தை யெல்லாம் உன்னிடம் இறக்கி விட்டானோ?" என்று பாடி எழுப்பினர்.

இவ்வாறு வல்லுறக்கம் கொண்ட கன்னியருள் ஒருத்தி வாயாடுவதில் வல்லவள். அவள் கடைசியாகக் கண்ணைத் துடைத்துக்

கதவைத் திறந்தாள்; நாணிக் கோணி நின்றாள். அவளைப் பார்த்து, "மானின் நேர் விழி மாதே! நேற்று நீ தேன் ஒழுகப் பேசினையே! நாளைப் பொழுது புலர்வதன் முன்னம் நானே வந்து எல்லோரையும் எழுப்புவேன் என்று சொன்னாயே! அந்தச் சொல் எந்தத் திசை வழியாய்ச் சென்றதோ? அல்லது உனக்கு இன்னும் பொழுது விடியவில்லையோ?" என்று நயமாக அசதியாடினர்.

தோழியர் எல்லோரும் வந்து சேர்ந்த பின் இறைவன் புகழைப் பாடிக் கொண்டு நீராடும் துறையை நோக்கி நடந்தனர்.

**"மாயனை மன்னு வடமதுரை மைந்தனை**
**தூய பெருநீர் யமுனைத் துறைவனை**
**வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்**
**போய பிழையும் புகுதருவான் நின்றனவும்**
**தீயினில் தூசாகும்**
**செப்பேலோர் எம்பாவாய்"**

(போய் - முன் செய்த; புகுதருவான் நின்றனவும் - இனி வர இருக்கும் தீவினைகளும்; தூசு - பஞ்சு)

"மாலே! மணிவண்ணா! மாயா! மதுசூதா! ஆதியும் அந்தமும் ஆகிய நின் புகழே பாடுவோம்; ஆடுவோம்; தீவினையை வேரறுப்போம்" என்றனர் திருமாலைப் போற்றும் கன்னியர்.

இவ்வண்ணமே சிவனடியாராகிய சிறுமியர் 'எம்மையாளும் ஈசனே! பழமைக்கெல்லாம் பழமையாயுள்ள பரம்பொருள் நீயே! புதுமைக்கெல்லாம் புதுமையாய் நின்ற புனிதனும் நீயே! செம்பொருளாகிய நின்னை எம்பெருமானாகப் பெற்றோம்! நின் மெய்யடியாரையே பணிந்து மணந்து வாழ்வோம்.

**"முன்னைப் பழம்பொருட்கும்**
**முன்னைப் பழம்பொருளே**
**பின்னைப் புதுமைக்கும்**
**பேர்த்துமப் பெற்றியனே**
**உன்னைப் பிரானாகப்**
**பெற்றவுன் சீரடியோம்**
**உன் அடியார் தாள்பணிவோம்**
**ஆங்கவர்க்கே பாங்காவோம்"**

(பேர்த்தும் - மீண்டும்; பெற்றி - தன்மை; பாங்கு - உரிமை)

என்று அகமகிழ்ந்து பாடிச் சென்றார்கள்.

நீராடும் துறையைக் கண்ட போது நங்கையர் நெஞ்சம் களித்தது; முகம் மலர்ந்தது. கை வளை ஒலிக்க, காலணி சிலம்பக் கடிது சென்று தண்ணீரின் உள்ளே பாய்ந்தார்; மூழ்கினர்; மிதந்தார்; நீந்தினர். காதில் அணிந்த குழையாட, கழுத்தில் அணிந்த இழையாட, மாலை சூழ்ந்த குழல் ஆட, மகிழ்ந்து வண்டின் குழாம் ஆட அங்கும் இங்கும் ஓடினார்; ஈசன் புகழ் பாடினார்.

**"காதார் குழையாட**
**பைம்பூண் கலனாட**
**கோதை குழலாட**
**வண்டின் குழாமாட**
**சீதப் புனலாடி**
**சிற்றம் பலம்பாடி"**

(கோதை - மாலை; குழாம் - கூட்டம்; சீதப் புனல் - குளிர்ந்த நீர்; சிற்றம்பலம் - தில்லைத் திருக் கோயில்)

இன்புற்ற இளங் கன்னியர் கோலத்தைத் திருவெம்பாவை பாடிற்று.

பாவைப் பாட்டுப் பாடிப் பரமன் அடி தொழுதால் மாதம் மும்மாரி பொழியும்; பசியும் பிணியும் ஒழியும் என்பது தமிழ் நாட்டார் கொள்கை. கருணை வாய்ந்த மேகத்தைக் கை கூப்பித் தொழுது, "வான் முகிலே! நீ கருங்கடலின் நீரைக் கவர்ந்து, திருமாலின் உருவம் போல் மெய் கறுத்து, அப் பெருமான் கையிலமைந்த சங்குபோல் முழங்கி, சக்கரம் போல் மின்னி, சரம் உமிழும் சாரங்கம் போல், நாடு செழிக்க மழை பொழிவாயாக" என்று நயந்து வேண்டினர் திருமாலைத்தொழும் நங்கையர்.

**"ஓங்கி உலகளந்த உத்தமன் பேர்பாடி**
**நாங்கள் நம்பாவைக்குச் சாற்றிநீ ராடினால்**
**தீங்கின்றி நாடெல்லாம் திங்கள்மும்**
**மாரி பெய்து"**

செந் நெல்லும், தீம்பாலும் செழிக்கும் என்று திருப்பாவை கூறுகின்றது.

அப்படியே சிவனடியாராகிய சிறுமியரும் வானத்தை நோக்கி "கைம்மாறு கருதாக் கருணை முகிலே! நீ நெடுங் கடலின் நீரை முகந்து உண்டு, எம்மையாளுடைய உமையம்மையின் மேனி போல் கறுத்து, அவள் சிலம்பு போல் ஒலித்து, மருங்குல் போல் மின்னி, புருவம் போல் வில்லிட்டு,

**"முன்னி அவள் நமக்கு**
**முன்சுரக்கும் இன்னருளே**
**என்னப் பொழியாய்"**

என்று கை கூப்பித் தொழுவர்.

இவ்வாறு மார்கழி நீராடி இறைவனை மகிழ்ந்து பாடும் முறை சமண மதத்திலும் உண்டு என்பது சங்க இலக்கியத்தால் அறியப்படுகின்றது. காலைக் கோழி கூவும் பொழுது, கருங் குவளை போன்ற கண்களையுடைய கன்னியர் எழுந்து அறிவனைத் தொழுது கன்னீராடும் சீர்மையை,

**"ஆழிசூழ் வையத்து**
**அறிவன் அடியேத்தி**
**கூழை நனையக்**
**குடைந்தும் குளிர்புனல்**
**ஊழியுள் மன்னுவோம்**
**என்றேலோர் எம்பாவாய்"**

(ஆழி - கடல்; அறிவன் - அருக தேவன்; கூழை - தலை மயிர்)

என்று ஒரு பழம் பாட்டு உணர்த்துகின்றது.

# வட இந்திய யாத்திரை 25

வடக்கே பல அதிசயங்கள், அற்புதங்கள் நடைபெற்று வருகின்றன.

முட்செடிகள் மண்டிக் கிடக்கும் காடுகள் அழிக்கப்படுகின்றன. பல லட்சம் ஏக்கரா பூமி திருத்தப்பட்டு விவசாயத்துக்கு ஏற்ற வண்ணம் மாற்றப்பட்டு வருகிறது. அமெரிக்க இன்ஜினியர்கள், இந்திய இன்ஜினியர்கள் எல்லாரும் ஏர் பிடித்து உழுகிறார்கள். டிராக்டர் கலப்பைகளும் உழுகின்றன.

பெப்சு ராஜ்யத்தில் நூற்றுக் கணக்கான மைல்கள், கண்ணுக் கெட்டிய தூரம் முட்புதர்கள், முட்புதர்கள், முட்புதர்கள் என்றிருந்த இடங்கள் மறைந்து விட்டன. காடும் மேடும் குன்றும் குழியுமாயிருந்த பூமிகள் சமமாக்கப்பட்டு வருகின்றன. ஆயிரம் மைல்கள் கால்வாய்கள் வெட்டித் தண்ணீர் கொண்டு வந்து பயிர் செய்து வருகிறார்கள். முத்துச் சோளமும், மக்காச் சோளமும், கரும்பும், நெல்லும், கோதுமையும், பல வகையான தானியங்களும் பயிர் செய்யப் போகிறார்கள்.

இன்னும் சில ஆண்டுகளில் அங்கெல்லாம் கோதுமைப் பயிர்கள் வளர்ந்து கதிர்விட்டு விடும். முத்து முத்தான கோதுமைக் கதிர்கள் தங்கமயமாகக் காட்சி யளிக்கும். இளங் காற்றில் அவைகள் அசைந்தாடும். அவற்றைத் தேடிப் பைங்கிளிகள் வந்து சேரும்.

இயற்கை அழகில் ஆசை கொண்டவர்கள் முதிர்ந்த தானியக் கதிர்கள் அசைந்தாடும் கோதுமை வயலைப் பார்த்துவிட்டுப் பரவசமடையப் போகிறார்கள். நமது நாடு சுதந்திரம் பெற்ற பயனை அனுபவித்து மகிழப் போகிறார்கள். ஆனந்தக் கூத்தாடப் போகிறார்கள்.

சுதந்திர இந்தியாவுக்கு இப்பொழுது வேண்டியது என்ன! இந்த நாட்டில் வேண்டிய ஆள் பலம் இருக்கிறது; அறிவு பலம் இருக்கிறது; பலவித வசதிகளும் வளங்களும் இருக்கின்றன. இந்த ஆள் பலத்தையும், அறிவு பலத்தையும், வளங்களையும் வசதிகளையும் கொண்டு இந்தியாவை உலகில் மகோன்னதமான தேசமாக மாற்றி விடலாம் அல்லவா! அந்தப் புனித காரியங்கள் மிகப் பெரிய அளவில் வட இந்தியாவில் நடைபெற்று வருகின்றன.



சுதந்திர பாரத நாட்டில் செல்வம் பெருகவும், சுபிட்சம் தழைக்கவும் காரியங்கள் நடைபெற்று வருகின்றன. இந்த நாட்டில் இனி பட்டினி என்ற கூச்சலுக்கே இடம் ஏற்படாமல், பஞ்சம் என்னும் பேய் நடமாட முடியாமல் செய்து வருகிறார்கள். பஞ்ச அரக்கனுடன் போர் நடத்தி வருகிறார்கள்.

கவியரசர் பாரதியார் 'எங்கள் தந்தையர் நாடென்ற பேச்சினிலே ஒரு சக்தி பிறக்குது மூச்சினிலே' என்று பெருமிதத்துடன் கூறி மகிழ்ந்தார் அல்லவா!

இப்பாரத நாட்டின் வருங்கால சந்ததிகள் பாரதியார் பாடியது போலவே பாடி ஆச்சரியப் படும்படியான காரியங்கள் பல நடைபெற்று வருகின்றன. அதில் ஒன்று தான் நாம் இப்பொழுது பார்க்கப்போகும் சாதனை; ஒன்றுக்கும் உபயோகமில்லாத காட்டை அழித்து நிலம் திருத்தும் விந்தை.

பாட்டியாலாவிலிருந்து சுமார் ஐம்பது மைல்களுக்கு அப்பால் தார்வா என்னும் இடத்தில் இப்பொழுது நிலம் திருத்திப் பயிர் செய்வதற்கு வேண்டிய வேலைகள் நடைபெற்று வருகின்றன. அந்த அற்புதக் காட்சியைப் பார்ப்பதற்காகப் புறப்படுவோம்.

இதோ ஜீப் கார்கள் தயாராக நிற்கின்றன. ஏறிக்கொள்ளுங்கள். பாட்டியாலாவிலிருந்து தார்வாவுக்கு நங்கல் கால்வாய் கரை ஓரமாக ஜீப் கார்கள் ஓடுகின்றன. ஒருகாலத்தில், ஒரு காலத்தில் என்ன! மூன்று ஆண்டுகளுக்கு முன்னால் வரை தண்ணீர் இல்லாத பொட்டல் வெளியாக இருந்த பூமி இன்று நீர்வளத்தில் இணையில்லாமல் காட்சி யளிக்கிறது. பக்ரா கால்வாயின் இரு கரையும் மோதித் ததும்பிக்





கொண்டு தண்ணீர் ஓடிக்கொண்டிருக்கிறது. சில இடங்களில் கால்வாயைக் கடந்து சென்றோம். சிறிதும் பயமில்லாமல் மிகுந்த தைரியத்துடன் பாலத்தைக் கடந்து சென்றோம். "ஓகோ! பாலத்தின்மீது ஜீப் காரில் செல்வதற்குத் தைரியம் வேறு வேணுமா!" என்று கேட்கலாம்.

அறுபது மைல் எழுபது மைல் வேகத்தில் ஜீப் கார்கள் பாலத்தின்மீது ஓடுகின்றன. சற்றுத் தவறி ஆற்றில் விழுந்து விட்டால் பன்னிரண்டு அடி ஆழமுள்ள பக்ரா கால்வாயின் பயங்கர வெள்ளத்தில் மூழ்கித் தவிக்க வேண்டியதுதான். அதற்கு அஞ்சாத நெஞ்சம் அவசியம் வேண்டும்.

பாட்டியாலாவிலிருந்து தார்வாவுக்குச் செல்லும் வழியில் உள்ள பிரதேசங்கள்தான் மான்சிங் போன்ற பயங்கரக் கொள்ளைக்காரர்கள் வாழ்ந்து வந்த, வருகின்ற பிரதேசங்கள். அவர்களைப் பற்றி எல்லாம் கேள்விப்பட்டிருந்ததால் எவ்வளவு பந்தோபஸ்துடன் சென்றாலும் மனத்தில் திகில் ஏற்படாமல் இல்லை. பக்ரா கால்வாய் புதிதாக வெட்டியிருப்பதால் அதன் இரு கரையிலும் அருமையான சாலை அமைத்திருக்கிறார்கள். அந்தச் சாலையில் செல்லும்போது, இவ்வளவு பயங்கரப் பிரதேசத்தில் சாலைகள் போட்ட, கால்வாய் வெட்டிய சர்க்காரின் சாதனைகளைப் புகழ்ந்து பாராட்டாமல் இருக்க முடியவில்லை.



## அபூர்வ காட்சிகள்

இந்தச் சாலையில் பிரயாணம் செய்யும்போது உண்மையில் நாம் ஏதோ அதிசய பூமியில் பிரயாணம் செய்வதாகவே தோன்றும். அவ்வளவு அருமையான சாலை. சாலையை ஒட்டினாற் போல்தான் பக்ரா கால்வாய் துள்ளிக் குதித்து ஓடி வருகிறது. கால்வாய்க்கு அப்பால் கண்ணுக் கெட்டிய தூரம் வரையில் ஒரே பொட்டல் காடுதான். நடுநடுவே சின்னச்சின்ன கிராமங்கள் காட்சி யளிக்கின்றன. அந்தக் கிராமத்தில் காணும் வீடுகள் எல்லாம் மண்ணால் செய்யப்பட்ட குடிசைகள். அந்தப் பயங்கர வெளியில் அமைந்திருப்பதால் அவற்றில் வாழும் மக்களை எண்ணி நாம் அனுதாபப்படாமல் இருக்க முடியாது. ஆனால் அந்தக் கிராமத்து மக்களைப் பார்த்தால் அவர்கள் மீது அனுதாபப் படும்படியாக அவர்கள் முகத் தோற்றமில்லை. மிகுந்த உற்சாகத்துடன் குதூகலமாக இருக்கிறார்கள்.

# திருந்திப்பயிர் செய்வோம்!

பகீரதன்



கட்டிகளை உடைத்து நிலம் சமன் செய்யப்படுகிறது

அதோ சில பெண்மணிகள் தலையில் தவலையை வைத்துக்கொண்டு பக்ரா கால்வாய்க்கு வருகிறார்கள். கால்வாயில் இருக்கும் படித்துறையில் இறங்கித் தண்ணீர் எடுக்கிறார்கள். தவலைகளுக்குள் 'குடுகுடு' என்று சத்தமிட்டுக் கொண்டு சட்லஜ் நதியின் தண்ணீர் பாய்கிறது. தண்ணீர்த் தவலைகளைத் தூக்கித் தலையில் வைத்துக் கொண்டு ஒய்யாரமாகக் கைகளை வீசிப் போகிறார்கள். இந்தக் காட்சி அங்குள்ள பயங்கரச் சூழ்நிலையை மாற்றி விடுகிறது. தேவலோகம், தேவர்கள், தேவிமார்கள் என்று எண்ணமிடத் தோன்றுகிறது. அந்தப் பெண்கள் தேவ கன்னிகைகளாகவே தோன்றுகிறார்கள். இப்படிக் கற்பனை செய்து கொண்டிருக்கும்போதே, ஜீப் கார்கள் அவர்களைத் தாண்டி எத்தனையோ மைல்களுக்கு அப்பால் ஓடிவிடுகின்றன.

இன்னொரு விநோதக் காட்சியையும் பார்த்தோம். அதாவது மயில் கூட்டங்கள் இயற்கை நிலையில் கூட்டமாகத் திரிவதைக் கண்டோம். ஜீப் வண்டியின் சத்தம் கேட்டதும் ஒரு கூட்டம் மயில் 'ஜிவ்'வென்று ஆகாயத்தில் பறக்கத் தொடங்கின. அடாடா! மயில்கள் கூட்டமாகப் பறக்கும் போது, அது சிறகடித்துப் போகும் அழகுக்கு உலகில் வேறு எதுவும் இணையில்லை. ஜீப் வண்டிகளைவிட வேகமாகப் பறந்து காட்டில் மறைந்து விட்டன.

அந்தப் பக்கத்துச் சாலையில் என் வாழ் நாளில் காணாத ஒரு காட்சியையும் கண்டேன். மாட்டு மந்தைகள் போல ஒட்டகங்கள் கூட்டம் கூட்டமாகத் திரிந்ததையும் பார்த்தோம். அந்த ஒட்டகங்கள் வயலில் ஏர் உழுகின்றன, மூட்டை சுமக்கின்றன, வண்டி இழுக்கின்றன, கவலை ஏற்றம் இறைக்கின்றன. மனிதர்கள் ஒட்டகத்தில் பிரயாணம் செய்யும் காட்சியும் சர்வசாதாரணம். ஒட்டகம் பூட்டிய வண்டிகள் சாரி சாரியாகப் போகின்றன. ஆனால் அவைகள் வண்டிகளே அல்ல. சிறிய வீடுகள்தான். அது பார்க்க வேண்டிய ஒரு காட்சி. அதில் ஒரு குடும்பமே பிரயாணம் செய்யலாம். அந்த வண்டிகளிலேயே சமையல் சாப்பாடு எல்லாம் சம்பிரமமாக நடக்கின்றன. அதாவது ஒட்டக வண்டியை ஒரு ஊர் சுற்றும் வீடு என்றுதான் சொல்ல வேண்டும்.

ஒட்டகத்துக்கு அருகில் ஜீப் கார் போகும்போது நாமும் நமது ஜீப் வண்டியும் மிகச் சாதாரணமாக மாறி விடுகிறோம். அவ்வளவு பிரும்மாண்டமான மிருகங்களை மனிதன் பிடித்துப் பழக்கி வேலை வாங்கி வருகிறானே, இதை விட வேறு என்ன அதிசயம் உலகில் இருக்கப் போகிறது!

குதிரைகள், எருமைகள், பசுக்கள் எல்லாம் கண்ணில் தென்படுகின்றன. ஒவ்வொன்றும் நன்றாக வளர்ந்து கொழு கொழு என்று காட்சி அளிக்கிறது. எருமைகளைப் பார்த்தால் யானைகளோ என்று மயக்கம் ஏற்படுகிறது. அவ்வளவு பிரம்மாண்டமாக இருக்கின்றன. ஒட்டகங்கள் பூட்டிய வண்டிகளும், நல்ல குதிரை பூட்டிய வண்டிகளும் சாலைகளில் போய்க் கொண்டிருக்கின்றன. வண்டிகளுடன் உயர்ந்த ஜாதி வேட்டை நாய்களும் போகின்றன. ஆமாம், கொள்ளைக்காரர்கள் வாழும் அந்தப் பிரதேசங்களில் நம்பிக்கையும் நன்றியும் உள்ள ஒரேஒரு பிராணி நாய்தானே! அதனால்தானோ என்னவோ அங்கு பிரயாணம் செய்யும் எல்லாரும் வேட்டை நாயின் துணையுடன் வெளியில் புறப்படுகிறார்கள்!

## காட்டுக்கு மத்தியில்

ஜீப் வண்டிகள் பக்ரா கால்வாய்க் கரையோரமாக உள்ள சாலைகளை விட்டுத் திரும்பி விட்டன. காட்டுக்குள், ஆமாம் அடர்ந்த காட்டுக்குள் புகுந்து விட்டன. குட்டையான மரங்கள் நிறைந்த அடர்ந்த காடுகள் நெடுந் தூரத்துக்கு நெடுந் தூரம் தோன்றுகிறது. சாலைகளே கிடையாது. ஜீப் வண்டிகள் எங்கு போகின்றன, எந்தத் திசையில் செல்லுகின்றன என்று தெரிந்து கொள்ள முடியவில்லை. பெரிய பெரிய குழிகள், குட்டைகள், குளங்கள், பாதாளக் கிணறுகள் எல்லாம் இந்தக் காட்டு வழியில் இருந்தன. அவற்றில் விழுந்து எழுந்திருந்து ஜீப்வண்டிகள் ஓடிக் கொண்டிருந்தன. எங்கும் புழுதி மயம். எதிரில் இருப்பது ஒன்றுமே தெரிய வில்லை. எல்லாரையும் பயமும் திகிலும் சூழ்ந்துகொண்டன. மூச்சு விடக் கூடப் பயந்து ஜீப் வண்டியின் கைப் பிடியை இறுகப் பிடித்துக் கொண்டு பத்திரிகையாளர்கள் எல்லாரும் உட்கார்ந்திருந்தார்கள்.

இந்தக் காட்டுக்கு மத்தியில் திடீர் திடீர் என்று சில கிராமங்களைக் காண முடிகிறது. கிராமங்களில் வீடுகள்தான் இருக்கின்றன. அதில் மனிதர்களே இல்லை. மிகப் பயங்கரமான அமைதி அங்கு நிலவுகிறது.

"இந்தக் கிராமங்களில் யாருமே இல்லையே! இவைகள் எல்லாம் ஏன் இப்படிக் காலியாகக் கிடக்கின்றன!"

"இந்தக் கிராமங்களில் முஸ்லிம்கள் வாழ்ந்து வந்தனர். இன்னும் சில கிராமங்களில் இக்

# பொங்கற்
# புது நாள்
# வாழ்த்துக்கள்!

துக்கள் வாழ்ந்து வந்தனர். அவர்களுடைய வீடுகள்தான் இவைகள் எல்லாம்."

"இப்பொழுது அவர்கள் எல்லாரும் எங்கேசென்றார்கள்!"

"முஸ்லிம்களில் பலர் பாகிஸ்தானுக்குக் குடியேறி விட்டனர். இந்துக்கள் கிராமங்களைக் காலி செய்து விட்டு நகர்ப்புறத்துக்குச் சென்று விட்டனர்."

"வீடு வாசல் நில புலன்களை யெல்லாம் விட்டுவிட்டா சென்று விட்டார்கள்!"

"ஆமாம். அவர்களுக்கு வீடு வாசலை விட நிலபுலன்களைவிட தங்கள் உயிர் மிகவும் முக்கியமாகப் போய் விட்டது."

"அப்படி என்ன அபாயம் வந்தது!"

## "ஏரும் கலப்பையும் தூக்கிய தோள்!"

**லால்குடி கிருஷ்ணமூர்த்தி**

ஏரும் கலப்பையும் தூக்கியதோள்! உயர்
ஏற்றத்திலேறி மிதித்திட்ட கால்!
சேறும் குழப்பிக் களையெடுத்து நல்ல
செந்நெல் விளைத்திட்ட சிங்காரக்கை!!
சீரும் சிறப்புமாய்ப் பானைவைத்துச் சோற்றில்
சீனியும் பாலும் கொதிக்கவைத்து இந்தப்
பாரும் வியந்திடப் பொங்கலிட்டு அதைப்
பங்கிடும் காட்சிதான் பொங்கலம்மா!
தோளோடு தோள்நின்று தொண்டு செய்தே உண்மைத்
தோழனைப் போலவே பாடுபட்டு
யாரோடும் சொல்லாமல் ஞானியைப் போல் மெய்
அன்பும் குறையாமல் தான் உழைத்து
வாழ்வோடும், தாழ்வோடும் நம்முடனே இங்கு
வாழ்ந்திடும் தெய்வமாம் ஆவினங்கள்
சோறூடு உண்டிடும் நாளிதைத்தான் நாமும்
சொல்லுவோம் பொங்கலோ பொங்கலென்று!

"சுதந்திரத்தின்போது பாகிஸ்தான் பிரிவினை ஏற்பட்டதல்லவா! அந்தச் சமயத்தில் இங்கு இப்பொழுது காணும் அமைதி கிடையாது. தடி எடுத்தவன் எல்லாம் தண்டல்காரனாக இருந்தார்கள். கொலையும் கொள்ளையும் சர்வ சாதாரணம். பெண்மணிகள் பயங்கரக் கொடுமைக்கு ஆளானார்கள். ரத்த ஆறு ஓடியது."

"உண்மையாகவா!"

"ஆமாம். அவைகளை வர்ணிக்க வார்த்தைகளே கிடையாது."

"அப்படியானால் இப்பொழுது இங்கு முஸ்லிம்களே கிடையாதோ!"

"இருக்கிறார்கள். மெப்சுவில் மட்டும் ஐம்பதாயிரம் பேர் எல்லாவித சௌகரியங்களுடன் வாழ்ந்து வருகிறார்கள். பெரும்பாலோர் மாலேர் கோட்லா சமஸ்தானத்தில் இப்பொழுது வசிக்கிறார்கள்."

இந்த விவரங்களை எல்லாம் ஜீப் வண்டியை ஓட்டி வந்த இன்ஜினீயர் மூலமாகக் கேட்டுத் தெரிந்து கொண்டோம்.

இப்பொழுது ஜீப் மீண்டும் பயங்கரமான காட்டுக்குள் புகுந்து விட்டது. மரங்களில் இலைகளே இல்லை. திக்குத் திசை தெரியவில்லை. ஜீப் வண்டி ஓடிக் கொண்டே இருந்தது. மீண்டும் சில கிராமங்கள் தென்படுகின்றன. இதில் மனிதர்கள் வசிக்கிறார்கள்.

"அப்பப்பா! இந்த இடத்தில் இவர்கள் எப்படித்தான் வசிக்கிறார்களோ!"

"இவர்கள் எல்லாம் மனம் மாறி, திருந்திய கொள்ளைக்காரர்கள்."

"கொள்ளைக்காரர்களா! மான்சிங் கூட்டத்தைச் சேர்ந்தவர்களா!"

"ஆமாம். ஆனால் இவர்களில் பலர் தங்கள் தொழிலிலிருந்து ஓய்வு பெற்று விட்டார்கள். இப்பொழுது இந்தக் காட்டில் எங்கு பார்த்தாலும் போலீஸ் முகாம் போட்டிருக்கிறது. அத்துடன் காட்டை வேறு அழித்து வருகிறோம் அல்லவா! அதனால் இவர்கள் கொட்டம் அடங்கி விட்டது."

இப்படிப் பேசிக் கொண்டிருக்கும் போதே மீண்டும் ஜீப் வண்டிகள் காட்டுக்குள் புகுந்து விட்டன. மொத்தம் பத்து ஜீப் வண்டிகள் வந்தன. ஆனால் அந்த ஜீப் வண்டிகளில் ஒன்றைக்கூட எங்கள் வண்டிக்குப் பின்னாலோ முன்னாலோ காண முடியவில்லை.

"மற்ற ஜீப் வண்டிகளைக் காணோமே!"

"எல்லாம் வந்து விடும்!"

"எப்படி வரும்! வழி ஒன்றுமே இல்லையே!"

"இப்பொழுதே இப்படிப் பயப்படுகிறீர்களே! முதன் முதலில் இந்தக் காட்டுக்குள் வந்து இதை அழித்து நிலம் திருத்துவதற்கு முயற்சி எடுத்துக் கொள்ள நாங்கள் எவ்வளவு கஷ்டப்பட்டோம் தெரியுமா!"

"கஷ்டமா! கற்பனைகூடச் செய்து பார்க்க முடியாது போலிருக்கிறதே!"

"கேளுங்கள், அந்தக் கதையை!" என்று முதலில் அந்தக் காட்டுக்குள் புகுந்து, காடுகளை அழித்து நிலம் திருத்த ஆரம்பித்த கதையைச் சொன்னார் இன்ஜினீயர்.

** ** **

காட்டுப் பிரதேசமானாலும் அந்த மண் வளமானது. பொன் விளையும் பூமி. இந்தப் பூமி கவனிப்பார் இல்லாமல் வெறும் காடாகி விட்டது. காட்டுக்கு மத்தியில் கொள்ளைக்காரர்கள் வேறு வசிக்க ஆரம்பித்தனர். சிறுத்தைப் புலி போன்ற பயங்கர மிருகங்கள் வேறு வாசம் செய்தன. கொடிய விஷப் பாம்புகளுக்கு அளவில்லை. இவ்வளவுடனும் முதலில் போராடினார்கள்.

நூற்றுக்கணக்கான மைல்கள் இப்படிக் காடு மண்டிக் கிடக்கிறது. காட்டுக்குள் புகுந்து விட்டால் எங்கு இருக்கிறோம் என்ன செய்கிறோம் என்று ஒன்றுமே புரிந்துகொள்ள முடியாது. அப்படிப்பட்ட காட்டுக்குள் முதலில் ஜீப் வண்டிகளுடன் இன்ஜினீயர்கள் புகுந்தனர். தைரியமாகப் புகுந்து விட்டனர். ஆனால் புகுந்து விட்டார்களே ஒழியத் திரும்பவும் வெளிவர வழி தெரியவில்லை. சிலர் பன்னிரண்டு மணி நேரம் கழித்து வெளியில் வந்தனர். சிலர் ஒரு நாள் கழித்து வந்தனர். ஒரு இன்ஜினீயர் இரண்டு நாள் காட்டுக்குள்ளேயே சுற்றிச் சுற்றிக் கடைசியில் ஜீப் வண்டியில் இருந்த பெட்ரோல், உடன் எடுத்துச் சென்ற பெட்ரோல் எல்லாம் தீர்ந்து, சாப்பிடுவதற்கு ஒன்றுமில்லாமல் பசியால் சோர்ந்து ஜீப் வண்டியிலேயே பிரக்ஞை யற்றுப் போய்விட்டார். பிறகு அங்கு காட்டை யழிக்கும் தொண்டில் ஈடுபட்டிருக்கும் சிப்பந்தி யாரோ பார்த்து விஷயத்தைச் சொல்லி அந்த இன்ஜினியரை மீட்டார்கள்.

இவ்வாறு திக்குத்திசை தெரியாத திண்டாட்டத்துடன், கொள்ளைக்காரர்களின் பய முறுத்தல்கள் வேறு. அவர்கள் திடீரென்று வந்து தாக்கி சாமான்களைப் பறித்துக்கொண்டு ஓடி விடுவார்கள். பயங்கரக் காட்டு மிருகங்களின் தொல்லைகள், விஷப் பாம்பின் உபத்திரவம் எல்லாவற்றையும் கொஞ்சம் கொஞ்சமாகச் சமாளித்தார்கள்.

இந்த விவரங்களை இன்ஜினியர்கள் சொல்லும்போது இந்தக் காலத்தில் அதிலும் இரண்டு ஆண்டுகளுக்குள் நடைபெற்ற சம்பவங்களா என்று வியக்க வேண்டி யிருந்தது. அப்படிப்பட்ட பயங்கரக் காட்டுக்குள் சென்றுகொண்டிருக்கிறோம் என்பதை நினைத்தால் எப்படி இருந்திருக்கும் என்பதை நேயர்கள் கற்பனை செய்து பாருங்கள்.

இப்படிப் பயங்கரமான சூழ்நிலைக்கு மத்தியில், அடர்ந்த காட்டுக்கு நடுவில் அமைந்திருந்த எல்லாவித வசதிகளுடன் கூடிய கூடாரத்துக்கு எதிரில் ஜீப் வண்டி போய் நின்றது. ஜீப் வண்டியில் இருந்து இறங்கியதும் என்னை நான் தொட்டுப் பார்த்துக் கொண்டு, என் அருகில் இருந்தவரையும் தொட்டுப் பார்த்துத் திருப்தி அடைந்தேன், எலும்புகள் ஒன்றும் முறிந்துவிடவில்லை என்று திருப்திதான். ஆனால் என்னுடன் ஜீப் வண்டியில் வந்த பத்திரிகையாளர் எங்கே!

நண்பரைப் பெயரைச் சொல்லிக் கூப்பிட்டேன். அதேமாதிரி அவரும் என்னைக் கூப்பிட்டுக் கொண்டிருந்தார். நான் அவரைத் தொட்டுப் பார்த்தேன். அவரும் என்னைத் தொட்டுப்பார்த்தார். தலையிலிருந்து கால்வரையில் ஒரே புழுதி மயமாக இருந்தார். அவர் பல்லும், கண்ணும்தான் பளீர் என்று தெரிந்தன. மற்றப்படி அவர் உடல் பூராவும் மண்தான். அவர் விநோத உருவத்தைப் பார்த்துச் சிரித்தேன். அவரும் அதே சமயம் என்னைப் பார்த்துச்சிரித்தார். அதற்குள் ஒவ்வொரு ஜீப் வண்டியாகக் கூடாரத்துக்கு வந்து சேர்ந்தன. அதிலிருந்து இறங்கியவர்கள் எல்லாரும் 'பேயா! பூதமா!' என்று அலறும்படியான உருவத்தில் உருமாறி இறங்கிக் கொண்டிருந்தார்கள்.

ஒரு மணி நேரத்துக்கு முன்னால் சலவையிலிருந்து எடுத்து மடிப்புக் கலையாமல் சூட்டும் கோட்டும் போட்டுக் கொண்டு, 'டிப்டாப்' பாக வந்த பத்திரிகையாளர்கள் பயங்கர உருவங்களாக உருமாறி யிருந்தார்கள்.

முகத்தையும், முன் கைகளையும் மட்டும் சுத்தம் செய்வதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது! சுத்த ஜலம் சேறாகிவிட்டது! எப்படியோ வாய்ப்புறத்தை மட்டும் துடைத்துக் கொண்டு சாப்பிட்டோம். பயங்கரக் காட்டுக்கு மத்தியில் எல்லா வசதிகளுடன் கூடிய கூடாரத்தில் உட்கார்ந்து சந்தோஷமாகச் சாப்பிடுவது அடிக்கடி கிடைக்கக் கூடியதா! இனி அப்படி ஒரு சந்தர்ப்பம் கிடைக்காது என்றுதான் சொல்ல வேண்டும்.

காட்டுக்கு மத்தியில் சிற்றுண்டி சாப்பிடவா வந்தோம்! இல்லையே. வாருங்கள் காடுகள் அழித்து நிலம் திருத்தும் விந்தையை, அதிசயத்தைப் பார்ப்போம்.

## நிலம் திருத்தும் விந்தை

முழங்கால் வரையில் ரப்பர் உறையும், தலையில் இரும்புத் தொப்பியும் அணிந்து கொண்டு இன்ஜினீயர்கள் முன் செல்லப் பத்திரிகையாளர்கள் அவர்களைப் பின்தொடர்ந்து சென்றோம். பத்திரிகையாளர்களிடம் இயற்கையாக இருந்து வரும் நகைச்சுவை எல்லாம் அங்கு வரவே இல்லை. எங்கு பார்த்தாலும் ஒரே பயங்கரமான சூழ்நிலை. அதில் வந்து தைரியமாகக் காட்டை அழித்து நிலம் இருத்தும் திருப்பணியில் இருக்கும் இன்ஜினீயர்களையும், அவர்கள் குழுவினரையும் பார்க்கும் போதெல்லாம் ஒரே ஆச்சரியமாகத்தான் இருந்தது. மனிதர்கள் எவ்வளவு கஷ்டமான காரியங்களில் ஈடுபட்டு எதிர்காலத்தை உருவாக்க வேண்டி யிருக்கிறது! இவைகள் எல்லாம் சுதந்திரம் பெற்றதால்தானே நாம் செய்ய முடிகிறது!

'சட சட' என்று பயங்கரச் சத்தம் கேட்டது! எல்லாரும் திடுக்கிட்டோம். "புலி கிலி ஒன்றுமில்லை. பயப்படாதீர்கள். காடுகள் அழிக்கும் இயந்திரங்களின் சத்தம்தான் கேட்கிறது" என்றார் இன்ஜினீயர்.

டாங்கிகள் போல் தோற்றமுடைய இரண்டு புல்டோசர் இயந்திரங்கள். ஒரு புல்டோசருக்கும் மற்றொரு புல்டோசருக்கும் மத்தியில் இருநூறு அடி நீளத்தில் ஒரு இரும்புச் சங்கிலி பிணைத்திருந்தது. இரும்புச் சங்கிலி எப்படி இருந்தது தெரியுமா! அதன் ஒவ்வொரு வளையங்களும், அதன் கரணைகளும் யானைக் கால்கள் போல் இருந்தன என்றால் சங்கிலியின் உருவத்தை மனத்தில் உருவகப்படுத்திப் பார்த்துக் கொள்ளுங்கள்.

புல்டோசர்கள் ஒவ்வொன்றும் நூற்று ஐம்பது குதிரை சக்தி கொண்டவைகள். இரண்டு புல்டோசர்களும் ஏககாலத்தில் காட்டுக்கு மத்தியில் ஒரே திசையில் ஓட ஆரம்பித்தன. இரண்டுக்கும் மத்தியில் உள்ள காடுகள் அந்த இரும்புச் சங்கிலியில் அகப்பட்டுச் சடசட என்று முறிந்து விழுந்தன. இப்பொழுது அந்த இரண்டு புல்டோசர் சென்ற பாதையில் உள்ள மரங்கள் எல்லாம்

முறிந்து விழுந்து விட்டன. பின்னால் இன்னொரு புல்டோசர் வருகிறது!

அந்த புல்டோசர் இயந்திரத்துக்கு முன்னால் ஆறடி உயரமும் இருபதடி அகலமும் கொண்ட அர்த்த சந்திர வடிவமான வளைவான மண்வெட்டி பொருத்தப்பட்டிருக்கிறது. அந்த மண்வெட்டி அப்படியே ஆறடி ஆழம் பூமிக்குள் நுழைந்து மண்ணோடு காட்டு மரத்தின் வேர்களைப் பெயர்த்துத் தள்ளிக் கொண்டு வருகிறது! இப்பொழுது மரங்கள் எல்லாம் முறிக்கப்பட்டு வேரோடு பெயர்த்து எறியப்பட்டு விட்டன. அந்த மரங்களை அப்படியே போட்டு விட்டு மேலே செல்கிறார்கள். எல்லாம் ஒரு சில நிமிஷங்களில் நடக்கின்றன. கண்கட்டு வித்தையோ, மந்திரமோ, மாயமோ, மகேந்திர ஜாலமோ என்று நினைக்கும்படி இருந்தன, காடுகள் அழிப்பதைப் பார்க்கும்போது.

பூமியில் இருந்து வேரோடு பெயர்த்து எறியப்பட்ட மரங்கள் காய்ந்துபோகும் வரையில், அதாவது சுமார் பதினைந்து நாட்கள் அப்படியே கிடக்கின்றன. பதினைந்து தினங்களுக்குப் பிறகு காய்ந்த மரங்களை இன்னொரு புல்டோசர் வந்து தள்ளிக் கொண்டுபோய் ஒரு இடத்தில் குவித்து விடுகிறது. மரங்களை எல்லாம் பெயர்த்து ஒதுக்கிய பூமியில் டிராக்டர்கள் பதினெட்டு அங்குல ஆழத்துக்கு உழுகின்றன. இந்த ஆழ உழவு நடைபெற்ற பிறகு அந்த நிலத்தை இன்னொரு டிராக்டர் மேடு பள்ளம் இல்லாமல் சமன் செய்து கட்டிமுட்டிகளை உடைத்து வருகிறது. இவ்வாறு சமன் செய்த நிலங்களை மீண்டும் ஆறு அங்குல ஆழத்தில் இன்னொரு டிராக்டர் உழுகிறது. இதன் பிறகு நிலம் நல்ல நிலைமைக்கு வந்து விடுகிறது. அவ்வாறு திருத்திய நிலங்களை, நிலம் வேண்டிய விவசாயிகளுக்குப் பிரித்துக் கொடுக்கிறார்கள்.

இந்தியாவிலேயே இவ்வாறு வேண்டாத காட்டை அழித்து நிலம் திருத்தி வரும் இடம் பெப்சுதான். முதல் ஐந்தாண்டு திட்டத்தில் மத்திய சர்க்கார் காட்டை அழித்து நிலம் திருத்தும் பணிக்காக மூன்று கோடியே பதினைந்து லட்சம் ரூபாய் பெப்சு சர்க்காருக்குக் கொடுத்திருக்கிறார்கள். பெப்சு சர்க்கார் ஒரு கோடிக்கு மேல் செலவு செய்து விட்டார்கள். சுமார் ஒரு லட்சம் ஏக்கர் காடுகளை அழித்து நிலம் திருத்தி விட்டார்கள். இன்னும் ஏழு லட்சம் ஏக்கர் நிலங்களைத் திருத்தப் போகிறார்கள். இதற்கு வேண்டிய எல்லாச் செலவுகளையும் மத்திய சர்க்கார் கடனாகக் கொடுத்து உதவி வருகிறார்கள்.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து ஐம்பத்து மூன்றும் ஆண்டுதான் மத்திய சர்க்கார் காட்டை அழித்து நிலம் திருத்துவதற்கு உத்தரவு வழங்கினார்கள். இந்தக் காட்டை அழிக்கும் கண்டிராக்டை இரண்டு அமெரிக்கக் கம்பெனிகள் எடுத்துக் கொண்டு செய்து வருகின்றன. உலகிலேயே அதிகமான காடுகளை அழித்து நிலம் திருத்திப் பயிர் செய்தவர்கள் அமெரிக்கர்கள்தான். அதனால் அவர்களுடைய மேற்பார்வையில் காடுகள் அழிக்கப்பட்டு நிலம் திருத்தப்படுகின்றன.

ஒரு கம்பெனியார் மட்டும் சுமார் இரண்டு லட்சம் ஏக்கர் நிலத்தில் உள்ள காடுகளை

அழித்து நிலம் திருத்தி விட்டார்கள். இன்னொரு டிராக்டர் கம்பெனியும் ஒரு லட்சம் ஏக்கருக்கு மேல் காட்டை அழித்து நிலம் திருத்தி யிருக்கிறது.

ஒரு ஏக்கர் காட்டை அழிப்பதற்கு டிராக்டர் கம்பெனிகள் எழுபது ரூபாய் வாங்குகின்றன. அங்கு காட்டை அழித்து நிலம் திருத்துவதற்கு அவர்கள் படும்பாட்டைப் பார்த்தால் எழுபது ரூபாய் அதிகம் என்று சொல்ல முடியாது. இந்த ரூபாய்களைச் சர்க்கார் டிராக்டர் கம்பெனிகளுக்குக் கொடுப்பதுடன் அவர்களுக்கு வேண்டிய எல்லாவிதமான வசதிகளையும் செய்து கொடுக்கிறார்கள்.

திருத்திய நிலங்களுக்கு வேண்டிய தண்ணீர் வசதிக்காக பக்ரா கால்வாயிலிருந்து பல கிளை வாய்க்கால்கள் வெட்டி யிருக்கிறார்கள். சுமார் பதின்மூன்றரை லட்சம் ஏக்கர் நிலங்களுக்குத் தண்ணீர் தட்டில்லாமல் பாய்வதற்கு வேண்டிய வசதியான கால்வாய்கள் வெட்டுகிறார்கள். எழுநூறு மைல் நீளத்துக்குப் பக்ரா கால்வாய் வெட்டி விட்டார்கள். சென்ற ஆண்டில் மட்டும் நாள் ஒன்றுக்குப் பதினாறாயிரம் தொழிலாளர்கள் கால்வாய் தோண்டும் வேலையில் ஈடுபட்டு உழைத்திருக்கிறார்கள். திருத்தப் பட்ட நிலங்களுக்கெல்லாம் தண்ணீர் பாய்வதற்கு வசதியான கால்வாய்கள் இப்பொழுது வெட்டியாகி விட்டது.

சுமார் இருபதினாயிரம் ஏக்கர் நிலம் விவசாயிகளுக்கும் அகதிகளுக்கும் கொடுத்திருக்கிறார்கள். இதற்கு அந்த விவசாயிகள் ஏக்கர் ஒன்றுக்கு எண்பது ரூபாய் சர்க்காருக்குக் கொடுக்க வேண்டும். அதை எட்டு ஆண்டுகளில் பதினாறு தவணைகளாக விவசாயிகள் கொடுப்பதற்கு வசதி செய்திருக்கிறார்கள்.

பெப்சுவில் பெரும் பகுதி நிலங்கள் ஒரு சில ஜமீன்தார்களிடம்தான் இருக்கின்றன. நிலபுலன்களை விட்டுவிட்டு பாகிஸ்தானுக்குக் குடி போன முஸ்லிம்களின் நிலங்களை, பாகிஸ்தானிலிருந்து வந்த அகதிகளுக்குத் தலைக்குப் பத்து ஏக்கர் வீதம் பிரித்துக் கொடுத்திருக்கிறார்கள். சில இடங்களில் ராணுவத்திலிருந்து ஓய்வு பெற்றவர்களுக்கு நிலம் கொடுத்திருக்கிறார்கள். அப்படி ராணுவ வீரர்களுக்குக் கொடுத்திருக்கும் நிலங்கள் ஜமீன்தார்களிடமிருந்து சர்க்கார் விலைக்கு வாங்கிக் கொடுத்தவைகளாகும்.

** ** **

இந்த விவரங்களை எல்லாம் தெரிந்து கொண்டு பாட்டியாலாவுக்குத் திரும்பினோம். மீண்டும் அதே பயங்கரக் காடுகள். புழுதிப் படலம்! மூக்கு, கண், குடல், மயிர்க்கால்கள் எல்லாம் புழுதி. எங்கும் புழுதி மயம்! எல்லை காணாத சமுத்திரத்துக்குள் நீர் மூழ்கிக் கப்பல் புகுந்து வழி தெரிந்து போவதுபோல், புழுதிக் கடலில் எப்படியோ வழி கண்டுபிடித்துக் கொண்டு இன்ஜினீயர்கள் ஜீப் வண்டிகளை ஓட்டிக் கொண்டு வந்தனர்.

அடுத்தாற்போல் நேயர்களைப் பாட்டியாலாவில் உள்ள 'மியூஸிய'த்துக்கும், இந்தியாவிலேயே மிகச் சிறந்த தோட்டமான பிஞ்ஜோர் தோட்டத்துக்கும் அழைத்துப் போக விரும்புகிறேன். இதோ பிரயாணத்துக்கு கார் வந்து விட்டது. ஏறிக் கொள்ளுங்கள். (தொடரும்)

ஜனவரி 25உ முதல்

**1956க்கு...**

அடுத்து வரும் புதிய உலகுக்கு
அமுத செந்தமிழ் பூமிக்கு

ஸ்ரீ கல்பனா பிக்சர்ஸின்

# நானே ராஜா

கதை வசனம்
கவிஞர் கண்ணதாசன்




தயாரிப்பு
R.R.சந்திரன்

**வீயார் பிலிம்ஸ் லிட்., 15, விஜயராகவாச்சாரி ரோடு, சென்னை-17.**

*விநியோகஸ்தர்கள் :*

● *சேலம் ஜில்லா:* சேலம் ஷண்முகா பிலிம்ஸ், குகை, சேலம் ● *வட, தென் ஆற்காடு, செங்கற்பட்டு (பாண்டிச்சேரி உள்பட) & சித்தூர்:* ஆனந்தா பிக்சர்ஸ், வேலூர் ● F. M. S.: ஷா பிரதர்ஸ் லிமிடெட், சிங்கப்பூர் ● *திருநெல்வேலி ஜில்லா:* S. R. சுவாமி பிக்சர்ஸ், திருநெல்வேலி ஜங்ஷன் ● *மைசூர் ஸ்டேட், தென் கன்னடம் & குடகு (பெல்லாரி ஜில்லா உள்பட):* ராகவேந்திரா பிக்சர்ஸ், பெங்களூர்-2 ● *திருச்சி & தஞ்சாவூர்:* வீயார் பிலிம்ஸ் லிமிடெட், புதுக்கோட்டை ● *மதுரை & ராமநாதபுரம்:* வீயார் பிலிம்ஸ் லிட்., மதுரை ● *கோயமுத்தூர் & நீலகிரி:* ஆனந்தா பிலிம்ஸ், கோயமுத்தூர் ● *சென்னை நகரம்:* வீயார் பிலிம்ஸ் லிட்., தி. நகர், மதராஸ்

இதர விவரங்களுக்கு: **வீயார் பிலிம்ஸ் லிட்., தி. நகர், மதராஸ்-17**




அன்று மாலை ஆபீஸிலிருந்து வரும் போது தாமோதரனை 'மகிழம்பூ' பத்திரிகையின் ஆசிரியர் கண்டார். "ஸார்! கதையை நாளைக்காவது அனுப்பி விடுங்கள். அதற்குமேல் தாமதமாக்காதீர்கள்!" என்று கூறிச் சென்றார். வீட்டையடைந்ததும் சிற்றுண்டியை முடித்துக்கொண்டு விளக்கைப் போட்டு விட்டு எழுத உட்கார்ந்தான் தாமோதரன்.

மறுநாள் முதல் ஆபீஸ் வேலையாக ஒரு வாரம் வெளியூர் சுற்றுப் பயணம் போக வேண்டியிருப்பதால் கதை அன்று இரவுக்குள் முடிந்தாக வேண்டும். கதை என்னவோ மனத்தில் உருவாகி விட்டது. பேனாவை எடுத்தபோது எங்கே முடிப்பது என்ற பிரச்னை அவனைக் குழப்பியது. நான்கு முறைகள் தலைப்பையும் 'அருவி' என்ற தன் புனை பெயரையும் போட்டு அந்தக் காகிதங்களைக் கசக்கி எறிந்து விட்டான். சோர்வுடன் நாற்காலியில் சாய்ந்தபோது, சமயம் பார்த்து ஒரு கொசு அவனது காதண்டையில் போய்த் தன் நடனத்தையும், சங்கீதத்தையும் அரங்கேற்ற ஆரம்பித்தது. கையால் விரட்டினான். வலது காதருகில் சென்றது. மறுபடியும் விரட்டியபோது இடது பக்கம் நகர்ந்தது. போதாக்குறைக்கு ஜன்னல் வழியாக 'விர்'ரென்று புகுந்த காற்றினால், வெள்ளைத் தாள்கள் பக்கத்துக்கு நாலாய்ப் பறந்து விட்டன. பொறுமையை இழுத்துப் பிடித்து நிறுத்தி அவற்றைப் பொறுக்கி எடுத்து ஒழுங்காக வைத்துவிட்டு, பேனாவை எடுத்தபோது, இந்த ஆர்ப்பாட்டங்களினால், அத்தனை நேரமாக வெண்மையாகப் பெருகிய கற்பனை, மணலில் புதைந்து மறையும் நீரென மறைந்து போய் விட்டது.

மணியைப் பார்த்தான். ஆறரை. இன்னும் வெள்ளைத் தாள்களில் ஒரு அக்ஷரம் பதியவில்லை. கதை எப்போது முடியப் போகிறது!

இச்சமயத்தில் வசுமதி அறைக் கதவைத் திறந்து கொண்டு எட்டிப் பார்த்தாள். ஈரக் கையைத் துடைத்தபடி உள்ளே பிரவேசித்த அவள்மீது தாமோதரனின் அலுப்பு முழுவதும் பாய்ந்தது.

"இத்தனை நேரம் என்ன செய்து கொண்டிருந்தாய் உள்ளே!"

"நாரத்தங்காய் ஊறுகாய்க்கு நறுக்கிக் கொண்டிருந்தேன். ஏன்!"

"உன் ஊறுகாயும் நீயும் உருப்படாமல் போக!" என்று இரைந்தான்.

"ஏன் இப்படிச் சிடுசிடுவென்கிறீர்கள்!"

"உன்னைப்போல ஒரு மனைவி வாய்த்தால் சிரித்து வழியத் தோணுமா பின்னே!"

"நான் என்ன தவறு செய்து விட்டேன் இப்போது!"

"நாளைக்கு நான் ஊருக்குப் புறப்படுவதற்குள் 'மகிழம்பூ'வுக்குக் கதை யனுப்பியாக வேண்டும். இன்னும் ஒரு எழுத்து எழுதவில்லை. பாஸ்கரனின் மனைவிமாதிரி உனக்கு மட்டும் இப்போது அந்தத் திறமையிருந்தால் இந்தப் பொறுப்பை உன்னிடம் ஒப்படைத்து விட்டு நான் நிம்மதியாகப் பிரயாண விஷயமாய் ஏற்பாடுகளைக் கவனிக்கலா மல்லவா! உனக்கு ஊறுகாய் போடவும், ஊஞ்சலில் புரளவும்தானே தெரியும்!......"

வசுமதி அங்கிருந்து நகர ஆரம்பித்தாள்.

"அதுதான் வேண்டாமென்கிறேன். 'எழுத்து' என்றவுடன் எட்டுக் காதம் பாய்ந்துவிடுகிறாயே! இங்கே வா!"

வசுமதி அங்கேயே நின்றாள்.

"அட! இங்கே வா என்றால்!......"

வசுமதி மேஜையருகில் வந்து நின்றாள்.

"தஞ்சை ஜில்லாக்களில் இப்போது புயல் அடித்ததே, அதையும் சேர்த்திருக்கிறேன் இந்தக் கதையில்—புது மாதிரியாக இருக்கட்டுமே என்று. நான் அப்படியே கோவையாகச் சொல்லுகிறேன். நீ எழுதிவிடு. கடைசியில் நான் திருத்தம் செய்கிறேன். முயன்றுதான் பாரேன்! நானும் இத்துடன் உன்னை எத்தனை முறைகள் கேட்டு விட்டேன் வசு. இது கடைசித் தடவை!"

"அங்கே யெல்லாம் புயல் சேதமாக்கியது போதாமல் அதை வைத்து நான் எழுதும் உங்கள் கதையும் அநியாயமாக நாசமாகிவிடும். நானும்தான் உங்களிடம் பல தடவைகள் சொல்லி விட்டேன். 'குருடனை ராஜ பார்வை பார்!' என்றால் முடியுமா என்று. இதெல்லாம் வரப்பிரசாதம். உங்களுக்கு இந்தத் திறமை அமைந்துள்ளது!"

"சரி சரி! போதும். உன் புகழ்ச்சி கேட்டுக் கேட்டுப் புளித்துவிட்டது எனக்கு. போய் உன் நாரத்தங்காய் ஊறுகாயையே கட்டிண்டு அழு. பாஸ்கரன் அதிர்ஷ்டசாலி! அவனும் ஒரு எழுத்தாளன். மனைவியும் ஒரு கதாசிரியை. இதற்கெல்லாம் அதிர்ஷ்டம் இருக்கவேண்டும்" என்று அலுத்துக் கொண்டு பேனாவை எடுத்தான். மனக் குழம்பலின் கொதிப்பில் மடமடவென்று கதை ஓடியது.

தாமோதரன் ஒரு பிரசித்திபெற்ற எழுத்தாளன். 'அருவி' என்ற புனை பெயரில் அவனுடைய அருமையான கதைகள் இடம் பெறாத பத்திரிகை கிடையாது. அவனுடைய மனைவி வசுமதிக்கு, தான் ஒரு பிரசித்திபெற்ற

எழுத்தாளனின் மனைவி என்று சொல்லிப் பெருமை. "உங்கள் எழுதும் திறனைப் பாராட்டுவது இருக்கட்டும். அதற்கேற்பப் புனை பெயர் வைத்துக் கொண்டீர்களே. அதுதான் பின்னும் புகழதற்குரியது. மலையினின்று பாய்ந்து குதித்தோடி வரும் அருவியின் வேகமும், அதன் ஓட்டத்திலுள்ள ஜிலு ஜிலுப்பும் குழப்ப மில்லாத தெளிவுத் தன்மையும், எல்லாம் ஒருங்கே அமைந்த உங்கள் எழுத்துக்கு மிகப் பொருத்தமான பெயர்!" என்று வாய் நிறையப் பாராட்டுவாள் வசுமதி.

இரவு வேளைகளில் சமையலறை வேலை முடிந்ததும் பால் டம்ளருடன் அவன் அறைக்கு வருவாள். ஓசைப்படாமல் வந்து நின்று கூப்பிடாமல் மணிக்கணக்கில் மேஜையருகில் நிற்பாள். மூழ்கிவிட்ட கற்பனையினின்று விடுபட்டு, பேனாவைக் கீழே வைக்கும்போது எதிரே முல்லைச் சிரிப்புடன் வசுமதி ஓவியமாய்க் காட்சியளிப்பாள். "என்னைக் கூப்பிடக் கூடாது! வந்ததே தெரியாதே!....அசடு!... கால் நடுக்க எத்தனை நேரம் நின்று கொண்டிருப்பாய்!" என்று அவன் அன்பொழுக வசுமதியிடம் கேட்பான்.



"கதை எழுதுதல் என்ன, கல்லுரலில் அரைக்கிற மாதிரியா! கற்பனைக்கு இடையே இடைஞ்சலேற்பட்டுக் கலைக்கப் பட்டால், மீண்டும் அதே சூழ்நிலையில் உங்கள் சிந்தையை நிறுத்த எத்தனை சிரமப்பட வேண்டும் நீங்கள்!" என்று பதில் வரும்.

"என் சிரமத்தை எத்தனை தெரிந்து வைத்திருக்கிறாய் வசு!" அவள் மாம்பழக்கன்னம் சிவக்க லேசாகக் கிள்ளியபடி பேசுவான் தாமோதரன்.

அன்றொரு நாள் இப்படித்தான். காய்கறி நறுக்கும்போது அரிவாள்மனை வசுமதியின் கைவிரலை ஆழமாக வெட்டி விட்டது. அதுவும் வலது கைவிரல். பீறிட்டு வழியும் இரத்தத்தை நிறுத்த இடது கையால் ஈரத் துணியைச் சுற்ற அரும்பாடு பட்டுக் கொண்டிருக்கையில் தாமோதரன் தண்ணீர் குடிக்க உள்ளே வந்தான். விஷயமறிந்து பதறினான்.

"ரத்தம் வழிகிறதே! இடது கையால் சுற்றுவது சிரமம் இல்லே! என்னைக் கூப்பிடக் கூடாது!" அவள் விரல்களில் துணியைச் சுற்றியபடி செல்லமாகக் கடிந்துகொண்டான்.

"இன்றைக்குள் அந்தக் கதையை முடிக்க வேண்டுமென்றீர்களே... தபாலுக்கு நேரமாகி விடுமே என்றுதான்......"

"பைத்தியம்! உன்னை விடவா எழுத்து முக்கியம் எனக்கு...உம்!..." கணவனின் அன்புப் பிடியிலிருந்து கையை விடுவித்துக் கொள்ள முடியவில்லை அவளால்.

இந்த அன்புக்கு மாற்றுக் குறைவு ஏற்பட்டிருக்காது என்றும், 'அருவி'யின் வாழ்க்கை வானத்தில் பாஸ்கரன் வந்திருக்கா விட்டால்! கதையை நேரில் சேர்ப்பிக்கச் சென்றபோது அதே இடத்தில் வந்த பாஸ்கரனுடன் அறிமுகமாயிற்று. வெளியிலே சந்திக்கும்போது மாத்திரம் தொடர்ந்த பழக்கம் முற்றி அன்று தான் முதல் முதல் பாஸ்கரனின் வீட்டுக்குச் சென்றான் தாமோதரன்.

"சந்திரா! சந்திரா!" என்று கூப்பிட்டான் பாஸ்கரன். சந்திரா மாடியிலிருந்து ஒய்யாரமாக இறங்கி வந்தாள்.

"இவன்தான் என் நண்பன் தாமோதரன். பிரபல எழுத்தாளர் 'அருவி'!"

"நமஸ்காரம்!" என்று அழகாகக் கை குவித்தாள் சந்திரா.

"மிஸ்டர் 'அருவி!' இவள் என் சகதர்மிணி. சந்திரா-பாஸ்கரன் என்ற பெயரில் பிரசித்தமாகி யிருக்கும் கதாசிரியை!"

"என்ன! அந்தப் பெயரில் எழுதுவது உன் மனைவிதானா!" என்றபோது தாமோதரனின் ஹிருதயம் கனத்தது. 'ஆஹா! பாஸ்கரன் நல்ல அதிர்ஷ்டசாலி! கணவனும் மனைவியும் ஒரே துறையில் பிரகாசிப்பது என்பது எத்தனை அபூர்வமான இணைப்பு!' எண்ணச் சுழல்கள் பக்கச் சுழிவினிடையில் கொண்டு வந்து தள்ளின. ஆம்! தனக்கு வாய்க்காத அதிர்ஷ்டமல்லவா அது!

சந்திரா 'அருவி'யின் எழுத்து வன்மையைச் சிரமமேது மில்லாமலே நாக்கிலே புரண்ட அடுக்கடுக்கான எதுகைமோனைகளுடன் கூடிய வர்ணனைகளால் வெகுவாகப் புகழ்ந்து தீர்த்தாள். அப்பப்பா! என்ன கலாரசனை—என்று உள்ளத்துள் வியந்தபோது வசுமதி மனக்கண்ணெதிரே வந்தாள். 'ஊருக்கு நாலு வரி கடிதம் எழுதுவது எனக்குப் பிரம்மப் பிரயத்தனம். நீங்கள் எப்படித்தான் வரிந்து வரிந்து எழுதுகிறீர்களோ!' என்று வசுமதி கூறிய, முன்பு அமுதம் துளித்த அந்த வார்த்தைகளை இப்போது எண்ணுகையில் அருவருப்புத் தோன்றியது. சே! தனக்கு ஏற்ற மனைவியா அவள்!

பாஸ்கரனின் வீட்டை விட்டுப் புறப்பட்ட போது, புதிதான புல் வெளியைக் கண்டு பாயப் புறப்படும் பசுவைப்போல அவனையும் மீறிக்கொண்டு அந்த ஆசை எழுந்தது.

"அன்று உரக்க ஒரு கதையைப் படித்தாயே. அது பாஸ்கரனின் மனைவி எழுதியதாம். 'சந்திரா-பாஸ்கரன்' என்ற பெயரில் எழுதுகிறாள்!" என்று வசுமதியிடம் தாமோதரன் சொன்னபோது, "அப்படியா!" என்று வாய் பிளக்கக் கேட்டாள்.

"கண்களையும் முகத்தையும் அப்படி அகல விரித்துக் கேட்டால் போதுமா! நீயும் எழுத



## இப்புது வத்னி உங்களுக்கு மகிழ்ச்சியளிக்கும்

தாவர சோப்புத் தயாரிப்பில் முதல்வரான கோத்ரெஜ் தயாரிக்கும் இந்த தூய்மையான சோப் உங்களுக்கு புத்துணர்வும் அதிக வசீகரமும் அளிக்கும். எங்கும் மக்களுக்கு உற்சாக மளித்ததைப்போலவே அது உங்களுக்கும் உற்சாகமளிக்கும்.

# வத்னி★

கடைசி சேதீவ் வரை புதுமையும் நறுமணமும் வாய்ந்தது.




6 அணா

மற்றும் வத்னி பேபி 2 அணா

ஆரோக்கியத்திற்கும் வசீகரத்திற்கும் திறவு கோல்

'சாவி' மார்க்

**கோத்ரெஜ்**

சலவை சோப்புத் தூள்கள்
ஷேவிங் ஸ்டிக் • ஹேர் டானிக்
டாய்லெட் பவுடர்

★ 'தாய்நாடு' என்று அர்த்தம் கொண்ட 'வதன்' என்ற வார்த்தையிலிருந்து திரிபு பெற்றது.

அங்கத்தினர்:



100%
இந்திய
நிர்வாகம்
மூலதனம்
உழைப்பு



வேண்டும் அப்படி!'' என்று அவன் அவளிடம் இடித்துரைத்தான்.

''என்ன! என்ன சொன்னீர்கள்! என்னையா! எழுதச் சொன்னீர்களா!'' வசுமதி வாய் விட்டுச் சிரித்தாள்.

''நிறுத்து! போதும் சிரித்தது! 'எழுத்து' என்றால் அது நம்மால் ஏற முடியாத ஏணி என்று நினைத்திருக்கிறாய் பார். அந்த எண்ணத்தை விடு முதலில். பிறகு தானும் முயலத் தோன்றும். நான் ஏற்றிவிடுவேன் அந்தத் திறமையை! நீயும் எழுத ஆரம்பித்தால் எனக்கு எத்தனை பெருமை! சிரமம் எவ்வளவு குறையும், தெரியுமா!''

''இதோ பாருங்கள்! இதென்ன, இஞ்செக்ஷன் மருந்தா, ஊசிமூலம் ஏற்றிவிட! உங்கள் எழுத்தை விமர்சனம் செய்யும் அருகதையே எனக்குக் கிடையாதே! நான் எழுதினால் அது ஒரே ஒரு இடத்தில்தான் செல்லுபடியாகும். அது கரி அடுப்பு; அதற்கு ஒரே ஒரு வாசகர்தான் இருக்க முடியும். அது நான்தான்!''

முயற்சி செய்து பார்க்கவும் தோன்றாமல் திட்டவட்டமாகப் பேசி விடுமளவுக்கு அவள் மனத்தை நிறைந்திருக்கும் தாழ்வு மனப்பான்மை கண்டு மட்டற்ற மனத்தாங்கலேற்பட்டது தாமோதரனுக்கு! ''சே! என்ன ஆர்வமில்லாத்தனம்! உன் ஸ்தானத்தில் இந்தக் குட்டிச் சுவர் இருந்தால்கூட முயற்சி செய்கிறேன் என்று தலையாட்டியிருக்கும்! வெறும் ஜடம்!'' என்று முணுமுணுத்தான்.

* * *

மணி எட்டரை என்பதை ஒரு முறை அடித்து அறிவித்தது கடிகாரம். தாமோதரன் வெகு வேகமாக எழுதி முடித்து விட்டான் கதையை.

''இதற்குள் முடித்தாகி விட்டதா! சாப்பிட வருகிறீர்களா!'' என்றாள் வசுமதி. ''இலை போடு!'' என்றான் ஒரே வார்த்தையில்.

மௌனமாகச் சாப்பிட்டு எழுந்த தாமோதரன் கதையை உறையிலிட்டு, விலாசமெழுதி, ''தபாலில் சேர்த்துவிட்டு வருகிறேன்'' என்று புறப்பட்டான். வழியில்தான் பாஸ்கரனின் வீடு. ''ஆபீஸ் வேலையாகச் சுற்றுப் பிரயாணம் போகிறேன். வருவதற்கு ஒரு வாரமாகும்'' என்று ஒரு வார்த்தை அவனிடம் சொல்லலாமென்று நுழைந்தான்.

உள்ளே உரத்த குரலில் சம்பாஷணை நடந்து கொண்டிருந்தது, பாஸ்கரனுக்கும், அவன் மனைவிக்குமிடையே. அது வெறும் சம்பாஷணையா!...இல்லை...

''சினிமாவுக்கு அழைத்துப் போங்கள் என்றால் காரிகை வீணாகிவிடும் என்று அப்படி மூனைந்து மூனைந்து எழுதினீர்களே! இன்று போகவில்லை கடைசியில். உங்கள் கதைகளில் தான் அப்படிப் போலும்! மனைவி 'இன்று'... என்று ஆரம்பிப்பாள். அடுத்தது அந்தத் தம்பதிகளை தியேட்டர் ஸோபாவில்தான் பார்க்கலாம்!''

''சுவாரஸ்யமாக எழுதும் நேரத்தில் நிறுத்தினால் அந்தக் கலைந்த கற்பனை மீண்டும் வருமா! சினிமாவுக்கு நாளைக்குக் கூடப் போய்க் கொள்ளலாம்!''

''ஆமாம்! அதிசயமாய் நீங்கள்தான் எழுதுகிறீர்கள்! கற்பனை கலைந்து விடுமாம்......! நானும்தான் எழுதுகிறேன். நீங்கள் கூப்பிட்டால் உடனே ஓடிவரவில்லை! அப்படியிருந்தும் இதுவரையில் எத்தனை கதைகள் நான் எழுதியிருக்கிறேன் தெரியுமா!''

''நீ ஒரு எழுத்தாளியாக இல்லாதிருந்தால் என் சிரமம், மதிப்பு எல்லாம் உனக்குத் தெரிந்திருக்கும் சந்திரா! என்னிடத்திலும் விசேஷ அபிமானமும், அனுதாபமும் இருந்திருக்கும் உனக்கு. தான் அடைந்திராத விசேஷத் திறனைப் பிறரிடத்தில் காணுகையில்தான் அதில் பிரமிப்பும், அது 'பெறுதற்கரிது' என்ற மதிப்பும் தோன்றும். அது தன் கைக்கும் எட்டி விட்டிருக்கும் லட்சியமாக இருக்கையில் அதில் மதிப்பில்லை; எவ்வித பிரமிப்புமில்லை.''

வந்த வழியே திரும்பி விட்டான் தாமோதரன். அவனுக்கு எல்லாம் ஒரே திகைப்பு: வியப்பு. பாஸ்கரன் கடைசியாகச் சொன்ன வார்த்தைகள் சிந்தையை உரசியது. கண்ணெதிரே...தான் எழுதும்போது பால் டம்ளருடன் கால் கடுக்க நிற்கும் வசுமதி; அன்று கையினின்று உதிரம் பெருக அவனுக்கு இடைஞ்சல் விளைவிக்கக் கூடாதெனத் தன் விரலில் தானே சரத் துணியைச் சுற்றிக் கொண்டிருந்த வசுமதி......தோன்றினாள்!

வேகமாக வந்து வீட்டில் நுழைந்தபோது வசுமதி மேஜையருகில் அமர்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தாள். கணவனைக் கண்டதும் எழுந்தாள். ''நீங்கள் கோபித்துக் கொண்டீர்களே என்று இன்று ஏதோ எழுத முயற்சி செய்தேன்......'' என்றாள் கொஞ்சலாக.

வசுமதியின் கையிலிருந்த பேனாவைப் பிடுங்கி வைத்தான் தாமோதரன். ''வேண்டாம் வசு! நீ எழுத வேண்டாம்! எழுத்துக் கலை எட்டாத லட்சியமாகவே இருக்கட்டும் உனக்கு......'' என்று கூறினான்.

''எழுதமாட்டேன், எழுதமாட்டேன்' என்றபோது எரிந்து விழுவானேன்! இப்போது முயற்சி செய்து பார்க்கிறேன் என்கிறபோது 'முயலாதே' என்று முகவாயைப் பற்றிக் கெஞ்சுவானேன்!''

அவன் பேச்சு அவளுக்குப் புதிராக இருந்தது.

# ...விஞ்ஞானத்தில்

**வினாடிவரை நேரத்தில் கவனிப்பு வைக்க வேண்டியது அத்தியாவசியம்.**

சென்ற ஐந்து ஆறு வருஷ காலத்திற்குள் இந்தியாவில் பதினேழு பெரிய விஞ்ஞான ஆராய்ச்சிசாலைகள் ஸ்தாபிக்கப்பட்டுள்ளன. தொழில் நுட்பத்தில் தேர்ச்சி பெற்றவர்களால் கையாளப்படும் நுட்பக் கருவிகளும் நவீன சாதனங்களும் இன்று நமக்கு ஏற்பட்டுள்ள பல பிரச்னைகளில் சிலவற்றைத் தீர்த்துக்கொண்டிருக்கின்றன. அவையாவன: பொதுஜன ஆரோக்கியம், உணவுப் பொருள் உற்பத்தி, தொழில், போக்குவரத்துச் சாதனங்கள்.



எல்லாவற்றிலும் மிகவும் முக்கியமான நுட்பக்கருவி சரியான நேரத்தைக் காண்பிக்கும் ஒரு கடிகாரம். நவீன விஞ்ஞான ஆராய்ச்சிக்குத் திறவுகோல் வினாடியின் பின்னம் வரை சரியானபடி மணி காட்டும் கடிகாரமே. ஆகையால் தான் உலக முழுவதிலுமுள்ள ஆராய்ச்சி சாலைகளில் நீங்கள் ஸ்விஸ் ஜுவல்ட்-லீவர் கடிகாரங்களையே காண்பீர்கள். இவை சரியான நேரத்தைக் காண்பிக்கும் ஸ்விஸ் கடிகாரங்கள்.

**ஸ்விஸ் ஜுவல்ட்-லீவர் கடிகாரம் தான் நீங்கள் செலவு செய்யும் பணத்திற்குச் சரியான பெறுமானம்**




**ஸ்விட்ஸர்லாந்து கடிகாரத்தயாரிப்பாளர்கள்**

FHI-17 TAML



[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

9

என்னைப் பொறுத்த மட்டில் கடவுள் என்பதும் சத்தியம் அன்பு என்பதும் ஒன்றே. கடவுளே ஆசாரம். கடவுளே நன்னெறி. கடவுளே சீலம். கடவுளே அச்சம் இன்மை. ஒளியைத் தருபவனும், உயிருக்கு மூலமும் கடவுளே. இவையெல்லாம் உண்மையாயினும் இவை மட்டுமே கடவுள் அல்ல. இவற்றிற்கு அப்பால் நிற்பவன் ஆண்டவன். நாஸ்திகனுடைய நாஸ்திகமும் அவனே. அவனுடைய எல்லையற்ற காருண்யமே நாஸ்திகனையும் 'இரு' என்று அநுமதி தருகிறது. அவன் நம் உள்ளங்களைச் சோதித்து உள்ளதை உள்ளபடி அறிகிறான். வாக்கும் மனமும் தாண்டி அப்பால் நிற்கிறான். அதாவது அவன் தன்மையைக் கருத்தில் கொள்வதும் சொல்லால் விளக்குவதும் முடியாத காரியம்.

நம்மை நாம் அறிவதில்லை. நம் உள்ளங்கள் நமக்குப் பூரணமாகத் தெரிவதில்லை. அவன் தான் நம் உள்ளங்களை அறிவான். நம்மைப் பற்றி நாம் சொல்வதை அவன் ஒப்புக் கொள்ள மாட்டான். நம்மைப் பற்றியும் நம் எண்ணங்களைப் பற்றியும் பேசும் பொழுது நாம் உண்மை பேசுவதில்லை. உண்மையை மாற்றிச் சொல்லுகிறோம். அவனே உண்மையைக் கண்டு கொள்கிறான்.

[redacted]

ஆண்டவன் கல்யாண குணங்கள் கொண்ட புருஷோத்தமன் ஆவான், அத்தகைய கடவுளை வேண்டுவோருக்கு. அதை வேண்டாத ஞானிகளுக்கு அவ்யக்தப் பொருளாக நிற்பான். கையால் தொட்டு வழிபட வேண்டும் என்று ஆசைப்படும் மக்களுக்கு அழகிய மூர்த்தியும் ஆவான். ஞானிகளுக்குச் சுத்த ஸத்வமாக அருவமாய் நிற்பான். அவரவர்களது வழிபாட்டு அவசியத்தின்படி மூர்த்தியாகவோ, அருவமாகவோ விளங்குவான். அவரவருடைய அறிவின்படி ரூபமும் அரூபமும் கொள்வான். நம் உள்ளத்தில் நமக்குள் கோவில் இருக்கிறான். நமக்கு அப்பாலும் வெளியிலும் இருக்கிறான்.

காங்கிரஸ் நடவடிக்கைகளினின்று கடவுள் என்ற சொல்லை நீக்கித் தள்ளி விடலாம். ஆனால் சொல்லை அப்புறப்படுத்த முடியும். பொருளை அப்புறப்படுத்திவிட முடியாது. "உறுதிமொழி" என்றால் என்ன. "கடவுள் சாட்சியாக" என்றால் என்ன? இரண்டும் ஒன்றேயில்லையாயின், உறுதி மொழி என்பதில் பொருள் இல்லை. நான்கு எழுத்துக்கள் கொண்ட "கடவுள்" என்பதையே மனசாட்சி என்று நீட்டியும் பொழிப்புரையாகவும் சொல்லுவது.

கடவுள் பேரில் சிலர் அநீதியும் அக்கிரமமும் கொடூரமும் செய்வதினால், அவனில்லாமல் போக மாட்டான். அவனை வைத்துச் செய்யப்படும் அக்கிரமங்களை அவன் பொறுத்து வருகிறான். பொறுத்தாலும் அவனை அலட்சியம் செய்ய முடியாது. மகா பயங்கரன். கடன்களையெல்லாம் ஒன்று விடாமல் வசூலிப்பான் அவன். நிர்த்தாட்சண்யமாக வசூலிப்பான். வட்டிக்குக் கடன் கொடுக்கிறவனும் அவனைப் போல் கண்டிப்புக்காரன் இல்லை. மனிதர்களோ மிருகங்களோ மற்றப் பிராணிகளிடம் நாம் எந்தமாதிரி நடந்து கொள்கிறோமோ

அவ்வித அநுபவத்தையே நாமும் பெறுவோம். நியதியை அறியாமல் செய்து விட்டேன் என்றால் அது அவனிடம் ஒரு சாக்காகச் செல்லாது. ஆயினும் அவனுடைய கருணைக்கு எல்லையில்லை. குற்றத்தை உணர்ந்து மனம் வருந்துவதற்கு எப்போதும் இடம் தருவான். காலம் கடந்து மீறி விட்டது என்பதில்லை. உலகத்தில் அவனைப் போன்ற ஜனநாயகக் கொள்கைக்காரன் இல்லை. நன்மையோ தீமையோ எது வேண்டுமானாலும் செய் என்று நம் ஒவ்வொருவருக்கும் பூரண சுதந்திரம் தந்திருக்கிறான். ஆயினும் அவனைப் போன்ற கொடுமைக்காரனும் இல்லை. கைக்கு எட்டினது வாய்க்கு எட்டாமல் செய்து விடுகிறான். ஆத்ம சுதந்திரம் என்று கொடுத்ததாகக் காட்டித் தன் விளையாட்டைத்தான் காட்டுகிறான். நம்முடைய சாஸ்திரங்களில் அவனுடைய காரியங்களை அவனுடைய விளையாட்டு என்று தான் சொல்வார்கள். லீலை என்றே மாயை என்றே சொல்லப்படுவது இதுவே. நாம் இருப்பது என்பதே ஒரு இல்லாத விஷயம். இருப்பது அவன் ஒருவனே. கடவுள் ஒன்றே மெய்ப் பொருள். நாமும் இருக்க வேண்டும் என்று விரும்பினோமானால் அவனைத் துதித்துக் கொண்டிருக்க வேண்டும். விடாமல் துதித்துக் கொண்டும், விடாமல் அவன் அடிமைகளாக நடந்து கொள்ள வேண்டும். அவன் கருத்துக்கு நாம் கருவிகளாக வாழ வேண்டும். அவனுடைய வேணுகானத்துக்கு நாம் ஆட வேண்டும். அப்போது எல்லாமே நலனாக முடியும்.

[யங் இந்தியா 5-3-25]

## வட்ட மேஜை

இசை விழாக் காலத்தில் வீணாதர தக்ஷிணாமூர்த்தியின் சித்திரம் பொருத்தமாக அமைந்திருக்கிறது. ராஜராஜ சோழன் காலத்தில் வீணையின் உருவம் எவ்வாறு இருந்தது என்றறிய மிக உதவியாயிருக்கிறது. இருபுறமும் சுரை வைத்து, சிறப்பாக மெட்டுகள் அமைந்திருந்ததாகத் தெரிய வருவது புதிய ஒளியைத் தருகின்றது. மணிவாசகப் பெருமான் யாழினர், வீணையர் என்று பிரித்துப் பேசுவதால் மெட்டுக்கள் அமைந்தது வீணையென்று ஊகிக்கலாம். தற்போது வழங்கி வரும் தஞ்சாவூர் வீணையென்பது இரகுநாத வீணை என்பர். அது யாழின் முகமும், வீணையின் உடலும் கொண்ட ஒரு இனிய சேர்க்கை. வீணாதரர் கையிலுள்ளது வடநாட்டு 'பீன்' என்னும் கருவியை ஒத்திருக்கின்றது. இத்தகைய அழகிய அட்டைப் படம் தந்ததற்கு நன்றி.

ராஜாஜியின் 'கள்ளின் கதை'யைப் போல் மனத்தை உருக்கும் கதை இலக்கியத்திலேயே வந்ததில்லை என்று துணிந்து கூறலாம். மரத்தின் கருவைச் சிதைத்து வந்த பொருள்கள் என்று கூற 'எல்லாம் வாசுதேவன் என்று பார்க்கும் பெரியோன்' ஒருவனால்தான் முடியும். இன்னும் தென்னை, பனை முதலியவை ஓங்கி வளர்ந்ததன் காரணத்தைக் கூறுவதா! மனிதர்கள் குரங்காக மாறும் வித்தையைப் புகல்வதா! அறிவுதரும் ஓலைகளுக்கிடையே அறிவைக் கெடுக்கும் கள்ளையும் வைத்த கற்பனையைப் பேசுவதா! ராஜாஜியின் கதை ஒவ்வொரு வரியும் ஒரு ரத்தினம்.

சென்னை
30—12—55 எஸ். இராமநாதன்

★

சர்க்கார் உத்தியோகத்திலிருந்து ஓய்வு பெற்ற நாளிலிருந்து இதுவரை பொதுநல வேலைகளில் ஈடுபட்டு ஊதியம் கருதாத பணி புரியும் தொண்டன் என்று என்னை முதலில் அறிமுகப்படுத்திக் கொள்ள விரும்புகிறேன்.

அடையாறு கலா க்ஷேத்திரத்தின் கலைவிழா தொடக்க தினத்தன்று ராஜாஜி பேசிய உரையை மிகுந்த ஆர்வத்தோடு படித்தேன். "நடனத்தைத் தொழிலாக்கக் கூடாது" என்ற ராஜாஜியின் அபிப்பிராயத்தோடு ஒத்துப் போகிறவன் என்பதில் மகிழ்ச்சி அடைகிறேன். ராஜாஜி தொழிலாக்குவதிலுள்ள ஆபத்துக்களை மனத்தில் பதியும்படி வெகு நன்றாக எடுத்துரைத்தார். இன்றைய நடனங்கள் பெரும்பாலும் கீழ்த்தரமான உணர்ச்சிகளைக் கிளறுவனவாக அமைந்திருக்கின்றன. இவற்றைக் கண்டிக்க வேண்டும். பொது மக்களுக்கு அப்படிச் சொல்வது பிடிக்காவிட்டாலும் சொல்லியே யாகவேண்டும். ராஜாஜி தமது பேச்சில் அவையடக்கமாகத் தமது கருத்துக்கள் 'தவறாக இருக்கலாம்; பத்தாம் பசலிக் கொள்கைகளாக இருக்கலாம்' என்று குறிப்பிட்டார். அவை தவறானவையும் அல்ல; பத்தாம் பசலியுமல்ல. அவை சரியானவை; புதுமையானவை; என்றென்றும் நிலைத்து நின்று உலகிலேயே மிகச் சிறந்ததான பாரதப் பெண் குலத்தின் நாணம், தெய்வத்தன்மை ஆகிய நற்பண்புகளைக் காப்பாற்றக் கூடியவை.

நான் விளம்பரம் விரும்பாத தொண்டன். இருப்பினும் பாரதநாட்டு தெய்வப் பெண் குலத்துக்கு இப்பொழுது ஏற்பட்டுள்ள தீங்கைப் பார்க்கும்போது அதைத் தடுக்க ஒரு சங்கம் நிறுவி இயக்கமே நடத்த வேண்டும் என்ற உணர்ச்சி எழுகிறது. இத்தீங்கை நான் நன்றாகப் பார்த்து அறிவேன். எனக்கு இப்பொழுது வயது 81.

கோடம்பாக்கம்
28—12—55 எஸ். எம். தாஸ்

## கல்கியின அமர தாரா

### அத்தியாயம் 23

# யுத்தம் நடந்தது

மற்றவர்கள் இருக்கும் போது, அவர்களுக்குப் புரியாமல் சங்கேதமான பாஷையில் பேசுவதற்கும், புரிந்து கொள்வதற்கும் ரொம்பத் திறமை வேண்டும். நான் கலாசாலையில் படித்துக் கொண்டிருந்த போது சில சமயங்களில் மாணவர்கள் இப்படிப் பேசுவதுண்டு. இந்துவிடம் நான் அப்படிப் பேசியது அவளுக்குப் புரியுமோ, புரியாதோ என்று நினைத்துக் கொண்டேன். உடனேயே இந்துமதியின் கண்களில் ஒரு பிரகாசம் உண்டாயிற்று. கண்களை அகல விரித்து, இதழ்க் கோணத்தில் சிறிய நெளிவுடன் என்னைப் பார்த்தாள்.

“இந்தப் புத்தகத்தினால் எனக்கு இன்று நல்ல வசவு கிடைத்தது. நான் எங்கேயோ அருவிக் கரையில் உட்கார்ந்து இதைப் படித்துக் கொண்டிருந்த படியால் தான் வீட்டுக்குச் சீக்கிரம் வரவில்லை என்று அம்மா கோபித்துக் கொண்டாள்” என்று கூறி விட்டுப் புன்னகை புரிந்தாள்.

அவள் என்ன கூறுகிறாள் என்பது எனக்குத் தெளிவாகப் புலப்பட்டது. என்னைக் காலையில் சந்தித்ததை அவளும் தன் அன்னையிடம் கூறவில்லை. நான் கூறியதை அவள் புரிந்து கொண்டு விட்டாள். இதை அறிந்து கொண்டதும் எனக்கு ஏதோ ஒருவகை இன்பம் ஏற்பட்டது. இதயத்தில் ஒரு கிளர்ச்சி உண்டாயிற்று. அவளுடைய புத்தி கூர்மையும், சமயோசிதமான பேச்சும் எனக்கு மகிழ்ச்சி ஊட்டின. எனக்குத் தகுந்த மாதிரி பதில் சொல்ல உலகமறியாத சிறுமிக்குத் திறமையிருப்பதைப் பார்த்து வியந்தேன்.






பிறகு ஏதோ சம்பிரதாயப் பேச்சுக்கள் பேசினோம். எனக்கு அவை ருசிக்கவில்லை. இந்துமதியின் முகத்தையே பார்த்துக்கொண்டு உட்கார்ந்திருந்தேன்.

தங்கபாண்டியன் இந்துவின் அன்னையிடம், "பண்ணையாரைப் பார்க்கத்தான் அம்மா இவன் இந்த ஊருக்கு வந்திருக்கிறான். நானே வந்து விடுவாரல்லவா? இந்த ஊரின் சரித்திர சம்பந்தமான விஷயங்களையெல்லாம் இவனுக்குத் தெரிந்து கொள்ள வேண்டுமாம். கொஞ்சம் ஆராய்ச்சிக் கிறுக்கு உண்டு இவனுக்கு. நான் பண்ணையாருக்கு இந்த ஊரின் சரித்திரமெல்லாம் தெரியும் என்று கூறியதால் பார்க்க வந்திருக்கிறான்" என்றான்.

அவர்கள் வீட்டுக்கு வருவதற்கு அதைவிட முக்கிய காரணம் ஏற்பட்டு



விட்டதென்பது அவர்கள் இருவருக்கும் எப்படித் தெரியும்?

"இந்த ஊர் என்ன அப்படிப் பிரமாதமான ஊரா? இதற்குப் பழைய சரித்திரம் என்ன இருக்கப் போகிறது?" என்றார் சந்திரமணி.

எனக்கு அந்தக் கேள்வி உற்சாகத்தை அளித்தது. இந்துமதிக்கு முன்னால் நான் கண்டு பிடித்த விஷயங்களைச் சொல்ல ஆர்வம் பிறந்தது. பேராசிரியர் கோதண்டராமனிடமிருந்தும், அரண்மனை வாசகசாலையிலிருந்தும் சேகரித்த சில விவரங்களை அவர்களுக்குக் கூறினேன். தங்கபாண்டியனுடைய பாட்டனுக்குப் பாட்டனான முத்து வீரப்பப் பாண்டியர், ஊமைத்துரையைக் காப்பாற்றியதையும், வெள்ளைக்காரர்களை விரட்டியடித்ததையும் பற்றி விவரமாக எடுத்துக் கூறினேன்.

அதை நான் சொன்னதும் இந்துமதி, "அப்பா ஒரு பாட்டுப் பாடுவார். அது நீங்கள் சொல்லும் முத்து வீரப்பப் பாண்டியனைப் பற்றித்தான் இருக்குமென்று தோன்றுகிறது" என்றாள்.

"அது என்ன பாட்டு? உனக்குத் தெரியுமா?" என்று மிகுந்த ஆவலுடன் அவளிடம் கேட்டேன்.

"சில அடிகள் மட்டும் தெரியும். சொல்லட்டுமா?" என்று கேட்டாள்.

"சொல்லியே தீர வேண்டும். இல்லாவிட்டால் யார் விடுகிறார்கள்?" என்று கூறினேன்.

உடனே அவள் தன் இனிமையான குரலில் ஒரு கிராமாந்தரத்துக் கும்மி மெட்டில் அமைந்திருந்த ஒரு பாட்டைப் பாடினாள். உண்மையில் என்னால் எப்போதும்போல அந்தப் பாடலின் பொருளில் மனம் செலுத்திக் கவனிக்க முடியவில்லை என்பதை ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். 'இந்துமதி பாடுகிறாள் என்பது தான்' எனக்கு நன்றாகத் தெரிந்தது. பாட்டு முடிந்ததும் முடிந்து விட்டதே என்று எனக்கு மிகவும் வருத்தமாக இருந்தது.

முடிந்ததும், "இந்தமாதிரி பாட்டு ஒன்று ஓராயிரம் ரூபாய் பெறும். நான் தங்கபாண்டியனாக இருந்தால் இதற்கு அட்சர லட்சம் கொடுப்பேன். பாட்டு இவ்வளவுதானா?" என்று கேட்டேன்.

"எனக்கு இவ்வளவுதான் தெரியும். அப்பாவுக்கு ஐந்நூறு பாட்டுகளுக்கு மேல் தெரியும்" என்றாள் இந்து.

'அப்பாவுக்குத் தெரிந்து என்ன பயன்? நீ பாடி நான் கேட்க முடியாதே' என்று நினைத்துக் கொண்டேன்.

"இந்த ஊரில் இன்னும் ஒரு மாதமாவது இருக்க வேண்டியதுதான்" என்று கூறிவிட்டு, அவர்களிடம் விடைபெற்றுக்கொண்டும் நானும் தங்கபாண்டியனும் அரண்மனைக்குப் புறப்பட்டோம். போகும்போது இந்துமதி என்னைப் பார்த்த பார்வை நெஞ்சை ஊடுருவித் துளைத்து விட்டது.

"பேசக் கிடைத்ததடி - நீ
பெண்குலத்தின் வெற்றியடி
ஆச்சர்ய மாயையடி - எந்தன்
ஆசைக் குமரியடி."

என்று என் நெஞ்சம் திரும்பத் திரும்பப் பாடியது. அதை வாய்விட்டுப் பாட வேண்டுமென்று ஆசையாக இருந்தது. பக்கத்தில் தங்கபாண்டியன் இருந்தபடியால் அப்படிச் செய்வதற்குத் துணிவு வரவில்லை.

முன்பு எத்தனையோ தடவை அவனுக்கும் என் நண்பர்களுக்கும் எதிரில்

நான் பாரதியாரின் காதல் பாட்டுக்களைப் பாடியிருக்கிறேன். அப்போதெல்லாம் உற்சாகமாக இருக்கும். அன்று மட்டும் பாடத் துணிவு வராததற்கு என்ன காரணம்? குற்றமுள்ள நெஞ்சம் நான் காரணமாக இருக்க வேண்டும். மனத்தில் ஒன்றுமில்லாத போது அந்த விஷயத்தைப் பற்றி நிறையப் பேச முடிகிறது. ஒரு சிறிய ஆசை புகுந்து கொண்டு விட்டால் அதைப் பற்றிப் பேசவே முடிவதில்லை. இது மிக வியப்பான விஷயம் அல்லவா?

அன்றிரவு பெரிய யுத்தம் ஒன்று காத்துக் கொண்டிருந்ததென்று எங்கள் இருவருக்கும் தெரிந்திருக்கவில்லை. பிற்பகலில் நாங்கள் இந்துமதியின் வீட்டுக்குப் போவதற்கு முன்னால் பாதாளக் கிடங்கைத் திறக்கச் சொல்லி, அதில் ஏதேனும் சுவடிகள் முதலியன கிடைத்தால் எடுக்கும்படி தங்க பாண்டியன் தன் ஆட்களிடம் கூறினான் அல்லவா? அந்தக் கிடங்கின் சாவி சின்னம்மாவிடம் இருந்தது. அவர் ரொம்பத் தயங்கிவிட்டுப் பின்னர்தான் சாவியைக் கொடுத்தாராம். தங்க பாண்டியன் ரொம்ப வற்புறுத்தினானாம். "பார், ரங்கதுரை. என் வீட்டில் எனக்குச் சிறிது கூடச் சுதந்திரமில்லை. என்னை நம்பிச் சாவியைக் கூடக் கொடுக்க மாட்டேனென்கிறார்கள். இதை எத்தனை நாட்களுக்குப் பொறுத்துக் கொண்டிருப்பது?" என்று முறையிட்டான், தங்க பாண்டியன்.



"சின்னம்மா மீது தவறு சொல்லாதே, பாண்டியா! உன்னிடம் சாவியைக் கொடுத்து விட்டால் உன் மாமா அவரைச் சண்டை பிடிக்கலாமல்லவா? அந்தப் பயம்தான் காரணம்" என்று கூறிச் சமாதானப் படுத்தினேன்.

பின்னர் அவன் மட்டும் கிடங்கு வரை சென்று திறந்து பார்த்து விட்டு வந்தான். நானும் போனால் ஏதேனும் சந்தேகத்துக்கு இடமாகுமென்று நான் போகவில்லை. சில சுவடிக் கட்டுகள் கிடைத்ததாகவும், அவைகள் ரொம்ப அழுக்கடைந்து கிடப்பதால் வெயிலில் போட்டுத் துடைத்து விட்டு மறுநாள் பார்க்கலாமென்றும் கூறியிருந்தான்.

அன்றிரவு சொக்கையாவுக்கு இந்த விவரம் எப்படியோ தெரிந்துவிட்டது.

நான் வாசக சாலையில் உட்கார்ந்து படித்துக் கொண்டிருந்தேன். திடீரென்று யாரோ கத்தும் சத்தம்கேட்டது. உடனே தங்கபாண்டியனின் குரலும் கேட்டது. எனக்கு வெளியே போய் என்ன விவரமென்று தெரிந்து கொள்ள வேண்டுமென்று ஆவலாக இருந்தது. ஆனால் அதை மிகக் கஷ்டப்பட்டு அடக்கிக் கொண்டேன். என்னைப் பார்ப்பதால் சொக்கையாவின் கோபம் அதிகமாகிவிடலாம். பிறகு தங்க பாண்டியனைக் கேட்டுத் தெரிந்து கொண்டால் போகிறது என்று நினைத்துக் கொண்டு வாசக சாலையை விட்டு நான் வெளியே போகவில்லை. ஆனால் எனக்குப் படிக்கவும் ஓடவில்லை.

நான் தங்கபாண்டியன் விஷயத்தில் தலையிட்டுக் கொண்டது சரிதானா என்று மூளையைக் குழப்பிக் கொண்டேன். ஒரு சமயம் ரொம்ப நியாயமான விஷயமென்று தோன்றியது. ஒரு சமயம் கொஞ்சங் கூடச் சரியில்லை என்று தோன்றியது. கடைசியில் ஆப்த நண்பனுக்கு உதவி செய்வதைப்

போல் நல்ல காரியம் எதுவும் இருக்க முடியாதென்ற தீர்மானத்துக்கு வந்தேன். அவனுடைய கட்சி ரொம்ப நியாயமானது. அவனோ உதவியற்ற நிலையில் தன்னந் தனியாகத் தவிக்கிறான். அந்தச் சமயத்தில் நான் என்னுடைய கௌரவத்துக்குப் பங்கம் நேர்ந்து விட்டதே என்று வருந்துவது ரொம்பக் கேவலம் என்று தோன்றியது. சீமைக்குப் போவதற்கு முன்னால் எப்படியாவது வக்கீலைச் சந்தித்துப் பேசித் தங்கபாண்டியன் விஷயத்தை ஒரு முடிவு செய்து விட்டுத் தான் போக வேண்டும் என்று தீர்மானம் செய்தேன்.

என் யோசனைகள் முடிவதற்கு முன்பே சந்தடி அடங்கி விட்டது. புத்தகத்தை மேஜை மீது போட்டுவிட்டு எழுந்து எங்கள் அறைக்குச் சென்றேன். தங்கபாண்டியன் படுத்துக் கொண்டிருந்தான். அவன் முதுகுப் பக்கம் தான் எனக்குத் தெரிந்தது. ஒரு வேளை தூங்கி விட்டானோ என்று நினைத்துக் கொண்டே அருகில் போய்ப் பார்த்தேன். "பாண்டியா!" என்று மெதுவாகக் கூப்பிட்டேன். அவன் கண்களைத் திறந்தான். நான் பயந்தே போனேன். கண்கள் கோவைப் பழமாகச் சிவந்திருந்தன. என்னைப் பார்த்ததும் அவன் கண்களில் கண்ணீர் பொங்கி வந்தது.

"என்ன தங்கபாண்டியா? என்ன நடந்தது? ஏன் அழுகிறாய்? சே! சே! நீ இப்படி உணர்ச்சிக்கு இடங் கொடுக்கலாமா? எழுந்திரு. என்ன நடந்ததென்று சொல்லு" என்றேன்.

தங்கபாண்டியன் கண்களைத் துடைத்துக் கொண்டே, "என்னைச் சொக்கையா சண்டை பிடித்ததற்காக அழவில்லை, துரை! நான் அப்படிப்பட்ட கோழை அல்ல. அவர் என் அருமைத் தந்தையைப் பற்றி இழிவாகப் பேசியதை என்னால் பொறுக்க முடியவில்லை. அகாலத்தில் துப்பாக்கியால் சுடப்பட்டு இறந்து போன அவரை நினைத்து நான் அழுதேன். அவர் மட்டும் உயிரோடு இருந்திருந்தால் சொக்கையா இப்படியெல்லாம் பேசுவதைக் கேட்டுக் கொண்டு அவர் பேசாமலிருப்பாரா? அல்லது இவன்தான் இப்படிப் பேசத் துணிவானோ?" என்றான்.

அவனுடைய குரலில் தொனித்த ஏக்கம் என் நெஞ்சை உருக்கியது. "இன்று பாதாளக் கிடங்கிலிருந்து ஓலைச் சுவடிகள் எடுக்கச் சொன்னேன் அல்லவா? அதை யாரோ அவரிடம் கூறியிருக்கிறார்கள். சின்னம்மாவிடம் போய் ஏன் சாவியைக் கொடுத்தாய் என்று சத்தம் போட்டாராம். இதைக் காரியஸ்தர் என்னிடம் வந்து கூறினார். உடனே நான் பின்கட்டுக்குப் போனேன் வழியில் மாமா வந்து கொண்டிருந்தார்.

'எதற்காக என்னைக் கேட்காமல் கிடங்கைத் திறந்தாய்? இந்தத் திருட்டுத் தனத்தையெல்லாம் என்னிடம் காட்ட முடியாது, தெரியுமா!' என்றார்.

'என் வீட்டில் என்னுடைய சொத்தை நீங்கள் திருடுகிறீர்கள். என் அப்பா இருந்த போதிலிருந்தே செய்து வருகிறீர்கள். நான் என்னுடைய வீட்டுச் சாமான்களை எடுப்பது திருட்டுத் தனமா? அதை நீங்கள் பூட்டி வைப்பது திருட்டுத்தனமா?' என்று கோபத்தில் கேட்டு விட்டேன்.

'உங்கப்பா வம்ச பரம்பரையாக வந்த சொத்தை யெல்லாம் சூதாட்டத்திலும், குடியிலும் தொலைத்தார். நீ ஒருவனைப் பிடித்துக் கொண்டு வந்திருக்கிறாயே. அதேமாதிரி அவரும் ஒருவனைப் பிடித்துக் கொண்டு வந்திருந்தார். அந்தக் காசிலிங்கம் வேறு எத்தனையோ கொள்ளையடித்தான். அந்தப் பரதேசிப் பயலுக்காக ஊரிலுள்ள கௌரவமான மனிதர்கள் அத்தனை பேரையும் விரோதம் செய்து கொண்டார். சகவாமூர்த்தியையும் விரோதித்துக் கொண்டார். காசிலிங்கத்தை அவர் வீட்டில் போய்க் கலாட்டா செய்யச் சொன்னார். அவன் கடைசியில் உன் அப்பாவையே கொன்றுவிட்டுப் போய்விட்டான். அப்படிப் பட்டவனுடைய அருமை மனைவியையும் பெண்ணையும் பார்க்கத்தான் இன்று நீ போய்விட்டு வந்திருக்கிறாய். அப்பனுக்கு ஏற்றபிள்ளை நீதான்! நம்முடைய மரியாதை, கௌரவம் எல்லாவற்றையும் தொலைத்து விடுங்கள்!' என்று இரைந்தார்.

'எதற்காக அனாவசியமாக யார்மீதோ பழி சுமத்துகிறீர்கள்? அவர்கள் வீட்டுக்குப் போவது ஒன்றும் எனக்குத் தவறாகப் படவில்லை. பண்ணையார் ரொம்பப் படித்தவர். என் சிநேகிதனுக்கு வேண்டிய விஷயங்களைச் சொல்வார் என்பதற்காகப் போனேன். இவ்வுலகில் சிலர் தன் குற்றத்தை மறைப்பதற்காகத்தான் மற்றவர்கள் மீது குற்றம் சுமத்துவார்கள்!'

'ஓஹோ! பண்ணையாரைப் பார்ப்பதற்காகத்தான் அவர் இல்லாத சமயத்தில் போய்விட்டு இரண்டு மணி நேரம் இருந்து விட்டு வந்தீர்களாக்கும்? அயோக்கியத்தனமாய்ப் பேசுகிறாயே. இதற்குத்தான் உன்னைப் பட்டணத்துக்கு அனுப்பிப் படிக்க வைத்தேனோ? உன்னை அனுப்பியதே பெரிய தவறு.




'அனசின்' விஞ்ஞான முறைப்படி சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். நவை நாம்புகளின் முக்கிய சேர்க்கை பாகங்களில் கூட்டாக வேலை செய்து விரைவில் வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி, மற்றும் தசை நார்களில் நோவு இவற்றை நீக்கும். அனசினில் அடங்கிய சில நான்கு மருந்துகள் —

1. குயினைன்: ஜுரத்தடுப்பு குணமும், பலவிருத்தி செய்வதற்கும் பிரசித்தி பெற்றது. ஜுரத்தை குறைப்பதில் மிகத் துரிதமானது.
2. காப்பின்: பலஹீனத்திற்கும், மனச்சோர்வுக்கும் மிதமான தூண்டுகோல் மருந்தாக விதிக்கப்பட்டிருக்கிறது.
3. பினஸிடின்: ஜுரத்தடுப்பு வலி நிவாரணத் தன்மைகளுக்கு பெயர் பெற்றது.
4. ஆஸிடில் ஸாலிஸிலிக் ஆஸிட்: தலைவலி அது போன்ற எல்லா வலிகளையும் போக்கடிப்பதற்கு மிகவும் உபயோகமுள்ளது.




அனசினிலுள்ள இந்த நான்கு மருந்துகளும் ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். 'அனசின்' விருதயத்திற்கு தீங்கு விளைவிப்பதோ அல்லது வயிற்றுக்கு கோளாறு உண்டாக்குவதோ கிடையாது. வலி, தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைகளில் வலி முதலியவற்றிலிருந்து விரைவிலும், பத்திரமாகவும், நிச்சயமாகவும் நிவாரணம் பெற எப்பொழுதும் அனசினையே கேட்டு வாங்குங்கள்.

**லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கின்றது.**

சகவாச தோஷம் உன்னை அப்படிக் கெடுத்து விட்டது!'

'நான் படிக்க வேண்டுமென்பதற்காகவா நீங்கள் என்னை அனுப்பினீர்கள்? இங்கே நான் இருந்தால் உங்களுக்கு இடைஞ்சலாக இருக்கும் என்று அனுப்பினீர்கள். என்னுடைய நடத்தையைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். என் தகப்பனாரைப் பற்றியும் அவதூறு சொல்ல வேண்டாம். அவரவர்கள் தாங்கள் ஒழுங்காக இருக்கிறோமா என்று பார்த்துக் கொண்டாலே போதும்......'

'டேய்! என்னை என்ன வென்று நினைத்துக் கொண்டிருக்கிறாய்? போனால் போகிறதென்று நீ சொல்லுவதையெல்லாம் பொறுத்துக் கொண்டிருந்தால் ரொம்பத் துள்ளுகிறாயே. காசிலிங்கத்தின் பெண்ணைப் பார்த்து இளித்து விட்டு வந்தவனுக்கு இந்தப் பேச்சு வேறு கேடா? என்னைப் பார்த்துப் பேச உனக்கு என்ன துணிச்சல்?' என்று என் மீது பாய்ந்தார். என்னை அவர் அடித்திருந்தால் நானும் ஒரு கை பார்த்திருப்பேன்.

அதற்குள் காரியஸ்தரும் சின்னம்மாவும் ஓடி வந்து அவரைப் பிடித்துக் கொண்டு விட்டார்கள். பிறகு சின்னம்மா என்னைச் சமாதானப் படுத்தினாள். 'பெரியவர்களுடன் சண்டை போடாதே, அப்பா. உன் அறைக்குப் போய்விடு' என்றார். உடனே நான் இங்கே வந்து விட்டேன். அவர் பேசிய பேச்சு என் நெஞ்சைப் பிழிந்தெடுக்கிறது. என்னைப் பற்றி அவர் கூறியதுகூட அவ்வளவாக என்னைப் பாதிக்கவில்லை. ஆனால் அவர் எப்போதோ இறந்து போன என் தந்தையைப் பற்றிக் கேவலமாகப் பேசியதை நினைக்கும்போதுதான் ரத்தம் கொதிக்கிறது'' என்றான்.

''இவ்வளவு பெரிய ரகளையாகும் என்று தெரிந்திருந்தால் அதைத் திறக்கச் சொல்லியே இருக்க மாட்டேன். இப்போது அப்படி என்ன சரித்திர ஆராய்ச்சி தட்டுக்கெட்டுப் போகிறது? நீயும் இப்படி அவரிடம் எதிர்த்துச் சண்டை போட்டிருக்க வேண்டாம், பாண்டியா!'' என்று கூறினேன்.

''என் சொத்தைக் கொள்ளையடித்து விட்டு இவன் என்னைத் திருடன் என்றால் மனம் பொறுக்குமா, துரை?''

''உண்மைதான். ஆனாலும் அவரோடு இப்போது சண்டை போட்டுக் கொள்வதால் ஒரு பலனும் இல்லை. சட்டம் நம் பக்கத்தில் தான் தீர்ப்புச் சொல்லும். ஆகவே உனக்கு இந்த ஜமீன் கட்டாயம் வந்து சேர்ந்து விடும். போனது போகட்டும். இருப்பதை நாம் காப்பாற்றிக் கொண்டால் போதுமானது. நீ கவலைப்படாமல் தூங்கு!'' என்று கூறி அவனைச் சமாதானப் படுத்தி விட்டுப் படுத்துக் கொண்டேன்.

**ப**டுத்துக் கொண்டால் தூக்கம் உடனே வந்து விடுகிறதா? சொக்கையா கூறியவையெல்லாம் எழுத்தெழுத்தாகக் கண்முன் வந்தன. ஞாபகசக்தி சற்றுக் குறைவாக இருப்பதே மிகவும் நல்லதென்று எனக்குப் பல சமயங்களில் தோன்றியிருக்கிறது.

அதுவும் இங்கிலாந்தில் நான் வசித்த போது, இந்துமதியை மறக்க முடியாமல் கஷ்டப்பட்டபோது, ஞாபக சக்தி



இல்லாமலிருந்தால் எவ்வளவோ நல்லது என்று அடிக்கடி தோன்றிக் கொண்டே இருக்கும்.

சொக்கையா கூறியதில் 'காசிலிங்கத்தின் பெண்ணைப் பார்த்து' என்ற வார்த்தைகள் என் நெஞ்சை வட்டமிட்டன. என் விஷயத்தில் அது உண்மை போலல்லவா தோன்றுகிறது. 'நிஜமென்று அந்தப் பெண்மீது எனக்கு இப்படி மனம் சடுபடுவானேன்? எனக்கும் அவளுக்கும் என்ன சம்பந்தம்? நானோ வெகு சீக்கிரத்தில் சீமைக்குப் போகப் போகிறேன். கல்யாணத்தைப் பற்றி நினைப்பதற்கே என் வாழ்க்கையில் இப்போது இடமில்லாமலிருக்கிறது. நான் போய்விட்டுத் திரும்பி வருவதற்குள் அவளை யாருக்காவது கல்யாணம் செய்து கொடுத்து விடுவார்கள். அப்







# ஹாஸ்யக்




படி இருக்கும்போது இந்த எண்ணத்தை வளரவிடக் கூடாது. நாளைக்கு மந்திர மூர்த்திப் பண்ணையாரைப் பார்க்கப் போனாலும் சரித்திர விஷயமாகப் பேசி விட்டு உடனே திரும்பிவிட வேண்டும். அவளிடம் ஒன்றும் அதிகமாகப் பேசக் கூடாது. சாதாரணமாகப் பேச வேண்டியது. அவளுடைய அழகைப் பற்றியெல்லாம் ஒன்றுமே சொல்லக்கூடாது' என்று தீர்மானம் செய்து கொண்டே தூங்கிப் போனேன்.

ஆனால் கனவுலகில் இந்துமதியுடன் பேசாமலிருக்க முடியவில்லை. எங்கள் கல்லூரியில் வருஷாந்திரக் கொண்டாட்டம் வருகிறது. அதற்கு நாங்கள் நாடகம் போடுகிறோம். சித்ரா நாடகத்தை நடிப்பதாகத் தீர்மானம் செய்கிறோம். நான் அர்ஜுனனாகவும், மன்மதனிடமும், வஸந்தனிடமும் வரம் பெற்ற சித்ராவாக இந்துமதியும் அதில் சேர்ந்து நடிக்கிறோம்.

மலர்கள் பூத்துக் குலுங்கும் கொடிகளுக்கடியில் நான் தூங்குகிறேன். அப்போது, சர்வாபரண பூஷிதையாக இந்துமதி வருகிறாள். நான் நடிப்பதை மறந்து "இந்து!" என்று கூப்பிட்டு விடுகிறேன். சபையோர் கொல்லென்று சிரிக்கும் சத்தம் கேட்கிறது.

நான் விழித்துக் கொண்டேன். 'சே! என்ன அசட்டுக் கனவு? இந்துமதி இப்படி என்னையறியாமல் என் மனத்தில் புகுந்து விட்டாளே! இதற்கு இடமே கொடுக்கக் கூடாது' என்று நினைத்துக் கொண்டே மறுபடியும் தூங்கிப் போனேன். ஆனால் அந்த உறுதியை என்னால் காப்பாற்றவே முடியாமல் போய் விட்டது.

இந்துவைப் பார்க்கப் பார்க்க என் மனோதிடம் குறைந்து வந்தது. கடைசியில் நான் சீமை சென்றபோது என் இதயத்தை அவளிடம் கொடுத்து விட்டுத்தான் சென்றேன்.

மறுநாள் பொழுது புலர்ந்ததும் மறுபடியும் பண்ணையார் மந்திரமூர்த்தியைப் பார்க்கப் போகவேண்டும் என்ற எண்ணம் எழுந்தது. காலையில் சுவடிக் கட்டுகளைப் பரிசோதிக்கச் சென்றேன். பாதிக்கு மேல் தொட்ட உடனே தூள் தூளாக உதிர்ந்து விட்டன. பூதக்

# களஞ்சியம்




சாமா




கண்ணாடியின் உதவியால் சுவடிகளிலிருந்து சில விஷயங்களைக் கூர்ந்து பார்த்து எழுதிக் கொண்டேன். அதிலிருந்து ஒரு முக்கியமான விஷயம் எனக்குத் தெரிய வந்தது.

தங்கபாண்டியனின் குடும்பத்தில் தலைமுறை தலைமுறையாக ஒரு சாபம் இருந்து வந்தது போலும். அந்த ஓலைச் சுவடிகளில் காணப்பட்ட வரிகள் அதைத் தெளிவாகப் புலப்படுத்தின. தங்கபாண்டியனின் பாட்டனுக்குப் பாட்டனான முத்துவீரப்பப் பாண்டியர் காலத்தில் எழுதப்பட்ட சில சுவடிகளும், அவருடைய பிள்ளையான சொக்கப்பத்தேவ பாண்டியர் காலத்தில் எழுதப்பட்டவைகளும் கிடைத்தன.

இதில் மிக விந்தையான விஷயம் என்னவென்றால் முத்துவீரப்பப் பாண்டியர், ஊமைத் துரையைச் சிறையிலிருந்து விடுவித்து, குங்குமத்துறை மலை மீது கோட்டையில் வைத்து ஆதரவு காட்டியதை அவருடைய உறவினன் ஒருவன் தான் வெள்ளைக்காரர்களுக்குக் காட்டிக் கொடுத்தான். அவன் பெயரும் சொக்கையாப் பாண்டியன் தான். முத்துவீரப்பப் பாண்டியரின் பிள்ளையான சொக்கப்பத்தேவ பாண்டியரும் கொலையுண்டு இறந்து போனார். இந்த விவரங்களுக்கு மேல் அதில் ஒன்றும் கிடைக்கவில்லை. நான் இதைத் தங்கபாண்டியனிடம் கூறவில்லை. கூறினால் அவனுடைய மனோ நிலையில் அது அவனுக்கு இன்னும் வேதனை அளிக்குமென்று பட்டது.

ஆனால் அதிலிருந்து எனக்கு இன்னும் ஊக்கம் அதிகமாயிற்று. எப்படியாவது அந்த ஆறு தலைமுறைகளில் நடந்த விஷயங்களைக் கண்டு பிடிக்க வேண்டுமென்று தீர்மானம் செய்து கொண்டேன். மறுபடியும் பாதாளக் கிடங்கைத் தான் சோதிக்க வேண்டும். சொக்கையா அதற்கு அனுமதி அளிக்க வேண்டுமே. என்ன செய்வது என்று யோசித்துக் கொண்டிருந்தேன்.

மறுபடியும் நான் மந்திரமூர்த்திப் பண்ணையாரின் வீட்டுக்குப் போன போது தங்கபாண்டியனும் வருவதாகக் கூறினான். நான் தடுக்கவில்லை. ஆனால் நான் போய்ச் சிறிது நேரம் கழித்து வருவதாகக் கூறினான்.

அங்கே நான் சென்றபோது முதல் நாள் இரவு நினைத்தமாதிரி நடந்து கொள்ள முடியவில்லை. இந்துமதி சண்பகமரத்தின்மீது சாய்ந்துகொண்டு, சண்பகப் பூவைக் கையில் வைத்துக் கொண்டு அஜந்தா சித்திரப் பாணியில் நின்று கொண்டிருந்ததைப் பார்த்ததும் என் மனம் நெகிழ்ந்து விட்டது.

அவள் என்னை "அஜந்தா சித்திரம் எப்படி இருக்கிறது?" என்று கேட்டதும் என்னையறியாமல், "அஜந்தா சித்திரத்தைப் பார்த்து விட்டுத்தான் நீ இப்படி நிற்கிறாயா? அல்லது உன்னைப் பார்த்து விட்டுத்தான் அந்தச் சித்திரக்காரன் சித்திரத்தை வரைந்தானா என்று திகைத்துக் கொண்டிருக்கிறேன்" என்று கூறினேன். பிறகு ஏன் அப்படிப் பேசினேம் என்று வருத்தப்பட்டேன்.

அன்று மந்திரமூர்த்திப் பண்ணையார் எங்களுடன் மிகவும் பிரியமாகப் பேசிக் கொண்டிருந்தார். அன்று இந்துமதியின் தந்தையைப் பற்றிப் பேச்சு திரும்பியது. அவரைப் பற்றிப் பண்ணையார் சொல்லும்போது எனக்கு அவரைப் பார்க்க வேண்டும் போலிருந்தது.

மேலும் தங்கபாண்டியன் கூறிய விஷயங்களை யெல்லாம் சேர்த்து ஒட்ட வைத்து நான் இன்னொரு விஷயத்தை ஊகித்திருந்தேன். என் ஊகம் வெறும் கற்பனையா அல்லது நிஜமா என்று தெரிந்து கொள்ள ஆவலாக இருந்தது. தங்கபாண்டியன் திருநந்திபுரம் மிராசுதார் ஈசுவரமூர்த்திக்கும் இந்துமதியின் தந்தைக்கும் இருந்த விரோதபாவத்தைப் பற்றிக் கூறியிருந்தான். தன் தகப்பனுருக்கும் ஈசுவர மூர்த்திக்கும் இருந்த விரோதத்தைப் பற்றிக் கூறிய போது அதையும் குறிப்பிட்டான். சொக்கையாவும் அதே விஷயத்தைக் கூறவே எனக்கு அந்த சந்தேகம் ஏற்பட்டது. என் மனம் அதை நிரூபித்துக் கொள்ளத் துடித்தது.

அதனால் அன்று காசிலிங்கத்தைப் பற்றிப் பேச்சு வந்தபோது நான் தூண்டித் துருவிக் கேள்விகள் கேட்டேன். அவருடைய போட்டோ இருந்தால் காட்டும்படி கேட்டேன். அதன்பிறகு எனக்குச் சரித்திர ஆராய்ச்சியில் கூட ஊக்கம் குன்றிவிட்டது. மந்திரமூர்த்திப் பண்ணையார் நான் முதல்நாள் ரொம்ப ரஸித்த நாட்டுப் பாடலை விளக்கிய போதெல்லாம் நான் பொறுமையாக உட்கார்ந்திருக்க வேண்டியதாயிற்று.

தங்கபாண்டியன் போகலாமா என்று கேட்டபோது எனக்குக் கிளம்ப மனம் வரவில்லை. இந்துவின் தந்தையினுடைய படங்களைப் பார்த்து விட்டுத்தான் போவது என்று தீர்மானித்துக் கொண்டிருந்தேன். ஆகவே அவனைப் பார்த்து, "நீ வேண்டுமானுல் முன்னுல் போ. நான் அந்தப் போட்டோ ஆல்பங்களைப் பார்த்து விட்டு அரை மணியில் வந்து விடுகிறேன்" என்று கூறினேன்.

அவன் கொஞ்சம் கோபமாகப் பார்த்து விட்டுப் போய்விட்டான். 'எதற்காகத் தங்கபாண்டியனுக்கு நான் அங்கே இருப்பது பிடிக்கவில்லை?' என்ற கேள்வி என் மனத்தில் எழுந்தது. பிறகு சொக்கையா கோபித்துக் கொள்வாரென்று அவனுக்குப் பயமிருப்பது இயல்புதானே என்று தோன்றியது. மேலும், அந்தச் சமயத்தில் அவன் கோபத்தைப் பொருட்படுத்தும் மனோநிலையில் நான் இல்லை. (தொடரும்)

## மங்களமே பொங்கும் நாள்!

என். எஸ். சிதம்பரம்

தித்திக்கும் அமுதுண்டு
தீங்கரும்பின் சாறுண்டு
சித்தமிக இனிக்கின்ற
செந்தமிழர் திருநாளாம்!
எத்திக்கும் பொங்கலென
இன்பஇசை எதிரொலித்து
முத்தமிழின் சுவைகூட்டும்
மோகமிகும் பெருநாளாம்!

காணுகின்ற இடமெல்லாம்
கவர்கின்ற புதுமையினில்
தோணுகின்ற எழில்காட்டித்
தூயமன நிலைகூட்டிப்
பேணுகின்ற பொன்னுளாய்ப்
பெருமைவளர் நன்னுளாய்
மாண்புற்ற செழும்பொங்கல்
மங்களமே பொங்கும்நாள்!

பாடுபட்டுப் பயிர்செய்து
பலனெல்லாம் காணும்நாள்!
நாடுபுகழ் உழவரெல்லாம்
நனிமகிழும் பொங்கல்நாள்!
வீடுதிகழ் மடந்தையர்கள்
வெகுஅழகாய் விளங்கும்நாள்!
ஈடில்லாப் பொங்கலைப்போல்
எந்நாளும் உண்டோதான்?

பால்பொங்கி மணம்பொங்கிப்
பழுதின்றி வளம்பொங்கிச்
சீலமிகும் இசைபொங்கிச்
செழுங்கலையின் சுவைபொங்கிக்
கோலமிகும் அருள்பொங்கிக்
குணம்பொங்கித் தவம்பொங்கி
ஞாலமுறு மாந்தரெல்லாம்
நலம்பொங்கி ஓங்குகவே!

# க்ளூகோவிட்டா மீண்டும் சக்தி அளிக்கிறது

அன்றுடும் உங்கள் அலுவல்களில் அபரி மிதமான சக்தியைச் செலவழிக்கிறீர்கள்— இந்த சக்தியை ஈடுசெய்தாக வேண்டுவது அவசியம்.

வியாதியை எதிர்த்துப் போருட நீங்கள் ஆரோக்கியமாயும், உடல் வலிமை யுடனும் இருக்கவேண்டியதவசியம். உங்கள் தேகத்தில் சக்தி குறைந்திருந்தால், வியாதியை எதிர்த்துநிற்கும் சக்தியும் குறைந்திருக்கும். நீங்கள் களைப்பும் தெம் பற்றதுமான உணர்ச்சி அடைகிறீர்கள். சக்தியை மீண்டும் அடைய மிகச் சிறந்த வழி க்ளூக்கோவிட்டா சாப்பிடுவதேயாகும்.






சூடான அல்லது குளிர்ந்த பானத்துடன் இரண்டு தேக்கரண்டி க்ளூக்கோவிட்டா சேர்த்துப் பருகுவதால், நாள் முழுவதும் விரயமாகும் சக்தியைத் திரும்ப அடைவதுடன், ஓய்வு நேரத்தை உற்சாகமாய் அனுபவிக்க உதவுகிறது. மேலும் ரத்தபுஷ்டியை அதிகரிப்பதுடன், தசைகளை வலிவுறுத்தியும், எப்பொழுதும் உங்களை ஆரோக்கியமாயிருக்கவும் செய்கிறது. க்ளூக்கோவிட்டா ஒரு மருந்தல்ல - உங்கள் ஆகாரத்துடன் உட்கொள்ளும் ஒரு சேர்க்கைப் பொருள்.



**காரன் பிராடக்ட்ஸ் & கம்பெனி (இந்தியா) லிட்.**

பம்பாய் 1 கல்கத்தா 1

# பண்ணும் பெண்ணும்






பாரதி இலக்கியச் சங்கத்தின் பாட்டுப் போட்டி ஆரம்பிக்கச் சரியாக ஐந்து நிமிஷங்கள் இருக்கையில் நீதிபதிகளில் ஒருவரான ஸ்ரீமதி சந்தோஷம் ராமானுஜம் வருத்தத்துடன் அனுப்பிய 'வர இயலவில்லை; மன்னிக்கவும்' என்ற செய்தி காரியதரிசி கந்தையாவின் காதுகளில் அபஸ்வரமாக ஒலித்தது! சபையில் கண்களை ஓடவிட்ட காரியதரிசிக்கு மூன்றாவது வரிசையில் அமர்ந்திருந்த சீதாராமனைக் கண்ட பிறகுதான் சுருதி கூட்டிய வாத்தியம் போல் உயிர் வந்தது. விழாவுக்கான நன்கொடை வசூலிப்பின் போது அஞ்ஞாதவாசம் புரிந்து அப்போது சபையில் ஆஜராகி இருந்த 'பிரமுகர்' ஒருவர் கார்வை மிக்க கனைப்பின் மூலம் தமது சங்கீத ஞானத்தையும், இருக்கையையும் ஒருங்கே உணர்த்தினார். இவ்வாறு 'சிரமதானம்' செய்ய வந்த அங்கவஸ்திர நண்பரைப் பொருட்படுத்தாது சீதாராமன் கரம் பற்றி நீதிபதி ஸ்தானத்தில் அமர்த்தி விட்டார், காரியதரிசி. தன்னை அழைப்பார் என்ற நம்பிக்கையில் 'சஞ்சாரம்' செய்தது வீண் போகவே, காரியதரிசி பேரில் விரைவில் நம்பிக்கை இல்லாத் தீர்மானம் கொண்டு வருவதாகக் 'கீழ் ஸ்தாயியில் கருவிய அங்கவஸ்திரத்தின்' முணுமுணுப்பையும் மீறிக் கொண்டு ஒலித்தது, மேடையில் போட்டி சங்கீதம்.

நீதிபதி ஸ்தானத்தில் அமர்ந்து 'ஆடுவோமே பள்ளு பாடுவோமே' என்ற சாகித்யத்தை இருபதாவது குழந்தை ஆட்டி வைப்பதைக் கேட்டு அலுத்துப் போன சீதாராமனுக்குப் புத்துணர்வு தருவதுபோல் 'சீனியர்' பாட்டுப் போட்டி ஆரம்பமாயிற்று. 'நல்லதோர் வீணை செய்தே' என்ற அடாணா ராகத்தில் இழைந்த இனியகானம் 'அடாடா நல்லதொரு வீணையின் நாதத்வனியோ!' என்று ஐயுறும்படி அவன் காதில் விழுந்தது. 'இன்னுமொரு பாட்டு' என்ற அவனது விண்ணப்பத்தைக் கட்டளையாகக் கொண்டு 'திக்குத் தெரியாத காட்டில்' என்ற ராகமாலிகை பாடி முடித்த போது சீதாராமன் எப்படி மார்க் போடுவது என்று தெரியாமல் திக்குமுக்காடிப் போய்விட்டான்! மோகனப் பாட்டு முடிவு பெற்றுக் கடைசியில் நளினா மேடையை விட்டு ஏக மௌனமாக இறங்கிய போதும் அவளது கட்டும் சுடர்விழிகள் மட்டும் இமை கொட்டி இசை கூட்டின போல் இருந்தன சீதாராமனுக்கு.

இறுதியில் நீதிபதிகள் கலந்து பேசுகையில் சீதாராமனின் ஜாபிதாவில் மட்டும் நளினாவின் பெயருக்கு எதிராக இனந் தெரியாமல் மார்க்கு விழுந்து இருப்பதைப் பற்றி மற்றொரு பாகவத நீதிபதி பல்லவி பாடிக் கொண்டே இருந்தார்.

நளினாவின் சாரீர சம்பத்தை மட்டும் சீதாராமன் எடை போடுவதோடு நிறுத்திக் கொண்டிருந்தால் இது சிறு கதையாக வளர்ந்திருக்காமல், பாட்டுப் போட்டியைப் பற்றிய வியாஸமாகவே முடிந்திருக்கும்! ஆனால் நாத வனப்புடன், நங்கையின் மேனி வனப்பையும் ஆராயப் போய், 'கோலக் குயில் போல் குரல் இனிமை வாய்ந்த வாலைக் குமரியின்' மீது சீதாராமனுக்குக் காதல் பிறந்து விட்டது.

இவ்வாறு தனி ஆவர்த்தனமாக ஒலித்துக் கொண்டிருந்த அவனது காதல் இசைக்கு பக்கவாத்தியம் கலந்து கொண்டது போல் ஆயிற்று, மீண்டும் ஒரு முறை நளினாவைச் சந்தித்து விஸ்தாரமாகப் பேசும் வாய்ப்பு கிடைத்தபோது. நளினாவின் அப்பாவான பேராசிரியர் பரிபூரணத்தை அணுகி, விஷயத்தை அதிக விரவல் இன்றி, லாகவமாக வெளியிட்டான் சீதாராமன். சாஸ்திரிய சங்கீதத்தைக் கேட்ட ரசிகனைப் போல் தலையை அசைத்து ஸ்ரீமான் பரிபூரணம் தமது பூரண சம்மதத்தைத் தெரிவித்த போது, சீதாராமனுக்கு அது கர்ணாம்ருதமாக இருந்தது.

நளினாவின் அழகைப் பற்றிய ஆலாபனை; கன்னிகா 'தானம்' செய்ய இசைந்த பேராசிரியரின் பெருமையைப் பற்றிய பல்லவி; நெஞ்சை அள்ளும் அவளது சங்கீதத்தைப் பற்றிய ஸ்வர சஞ்சாரம்; இவ்வாறு ஒரேயடியாகப் புகழ் பாடிய நேர்த்தியான கடிதமொன்று சீதாராமனின் தாயாருக்குப் பறந்தது.

உடன் தந்தியில் பெற்றோரின் சம்மதம் வந்தது என்ற 'துக்கடா'ச் செய்தியைச் சொல்லிக் கல்யாணத்துடன் 'மங்களம்' பாடிமுடித்து விட்டால் 'இது என்ன கதை' என்றுதான் கேட்கத் தோன்றும். அப்படி வாசகர்கள் கேட்டு விடுவார்களோ என்று அஞ்சித்தான்

சீதாராமனின் தாயார் சுகந்தவல்லி பேராசிரியர் பரிபூரணத்தின் பெயரைக் கேட்டு யோசனையில் ஆழ்ந்தாள்.

மகன் கடிதத்தைப் படித்து முடித்த சுகந்தவல்லியின் சிந்தனையும் ஒரே கணத்தில் முப்பது வருஷங்களுக்குப் பின் பாய்ந்தது.

புதைபொருள் ஆராய்ச்சி இலாக்காவைச் சார்ந்த பேராசிரியர் பரிபூரணத்துக்கு மேல் அதிகாரியின் பாராட்டும், உத்தியோக உயர்வும் 'விடுவிடு' என்று கிடைத்தன என்றால் அதற்கு, விளம்பரங்களில் காணப்படுவது போல், அவர் உபயோகித்த சலவை சோப்போ பூட் பாலிஷோ காரணமல்ல! அவரது சுறுசுறுப்பும், ஆராய்ச்சி அறிவுமே காரணம்.

மல்லிக் குளம் சிவாலயத்தில் சில அபூர்வ சரித்திர ஆராய்ச்சிப் பொருள்கள் இருக்கின்றன என்று அவ்வூருக்கு விஜயம் செய்தார் பேராசிரியர். ஹெட் மாஸ்டர் சிவஸ்வாமியின் விருந்தினராகத் தங்கி இருந்தார். இதுகாறும் கல்வெட்டு ஆராய்ச்சியிலேயே கவனம் செலுத்திய பேராசிரியர் முன் ஹெட்மாஸ்டரின் பெண் சுகந்தவல்லி மின்வெட்டுப் போன்று தோன்றி மறைந்த போது, அவரது உள்ளத்தில் புதைந்து கிடந்த வாலிப உணர்ச்சிகள் மெதுவாக வெளித் தோன்றின. செப்பேட்டில் பதிந்த எழுத்துப் போல், தமது இதயத்தில் இடம் பெற்று விட்ட சுகந்தவல்லியைத் தாம் மணம் செய்து கொள்ள விரும்பும் விஷயத்தைப் பரிபூரணம் வெளியிட்ட போது, ஏழையான சிவஸ்வாமிக்கு இத் தொடர்பு பெருமையாகவே இருந்தது.

"ஒரு விஷயம்; மூவர்ண திருமண அழைப்பிதழ். காகிதப் பைகளில் முகூர்த்தத் தாம்பூலம், ஒரு பார்ட்டி, ஒரு கச்சேரியுடன் விவாகம் செய்து கொள்வது; பின்னர் பத்திரிகையில் புகைப்படத்தை விளம்பரம் செய்து, வாழ்த்து அனுப்பியவர்களுக்கும் அனுப்பாதவர்களுக்கும் வந்தனம் கூறுவது—இந்த ஆடம்பரங்கள் எனக்குப் பிடிக்காது. தங்களுக்கும் அப்படியே என்று எண்ணுகிறேன். நீங்கள் குறிப்பிட்ட முகூர்த்தத் தேதியன்று சுவாமி மலைக்கு வந்து விடுங்கள்; எல்லா ஏற்பாடுகளும் நான் செய்து வைக்கிறேன். அந்த ஆண்டவன் சந்நிதானத்தில் கல்யாணம் செய்து கொள்ளுவதைவிட என்ன சிறப்பு வேண்டும்!" என்று பேராசிரியர் சொன்னதும் சிவஸ்வாமி 'ஆஹா' என்று கூறினர்.

முகூர்த்த தினத்துக்கு முதல் நாள் இரவு வரை சிவஸ்வாமி குடும்பத்தின் அடிச்சுவடே சுவாமி மலையின் எல்லையில் காணப்படவில்லை என்பதை அதிக ஆராய்ச்சி இன்றியே பேராசிரியர் தெரிந்து கொண்டார். மறுநாட் காலையும் அவர்கள் வந்து சேராமற் போகவே அவர் மனத்தில் கவலை புகுந்து கொண்டது. கோயில் மண்டபத்தில் காத்திருந்த மணமகன் கூட்டத்தார் பொறுமை இழந்தனர்.

"என்ன பரிபூரணம்! எங்கே சம்பந்திகள்!" என்று கவலையுடன் வினவினர், குடும்பத்துடன் விஜயம் செய்திருந்த மேலதிகாரி.

"ஒருவேளை பேராசிரியர் தமது மனைவியைப் புதைபொருள் போல மறைத்து வைத்துத் திடீரென்று நமக்குக் காண்பித்து மகிழ்ச்சித் திகைப்பில் ஆழ்த்தப் போகிறாரோ என்னவோ!" இது மேலதிகாரியின் கலாசாலையில் படிக்கும் செல்லப் பெண்ணுடைய கலகலப்பான ஹாஸ்யம்.

"என்ன கேலி வேண்டியிருக்கிறது!" என்று அங்கலாய்த்துக் கொண்டாள், அவள் தாய்—தங்கள் குடும்பத்தில் ஒருவர் போல் பழகிய பரிபூரணம், தன் பெண்ணையே கல்யாணம் செய்து கொள்வார் என்ற நம்பிக்கை சிதைந்து விட்டதில் அந்த அம்மாளுக்கு ஏமாற்றம்!

முகூர்த்த நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. வலியத் தானே முன் வந்து, விவாக ஏற்பாடுகளையும் செய்ததில் ஒரு வேளை பெண் வீட்டார் எளிதாக எண்ணி இளப்பம் செய்து விட்டார்களோ என்ற நினைப்பு பேராசிரியரின் நெஞ்சைக் கலக்கியது. என்றாலும், வயது முதிர்ந்த தன்னைப் பெண் விரும்பவில்லையோ என்ற ஐயம் எழுந்தபோது, பேராசிரியர் சிந்தித்து நரைத்த தமது முன்தலைக் கேசங்களை



யும் ஆய்ந்து தடித்த மூக்குக் கண்ணாடியையும் கவனித்து விட்டுப் பெருமூச்செறிந்தார்.

“பரிபூரணம், ஒரு நிமிஷம்!” என்ற மேலதிகாரியின் அழைப்பு; அதைத் தொடர்ந்து ஆலோசனையும், பேச்சும்; மறுப்பும், விவாதமும், சிந்தனையும், முடிவும். பெண்களிடையே கலகலப்பு! பிறகு காரியங்கள் நிகழ்ந்தன.

முகூர்த்த நேரம் முடிவதற்குள் பேராசிரியர் காலேஜ் குமரியின் கழுத்தில் மூன்று முடிச்சிட்டு விட்டார்!

மூட்டை முடிச்சுகளுடன் பரிபூரணம் கோஷ்டியினர் புறப்பட இருந்ததும், முடிச்சு மூட்டைகளுடன் சிவஸ்வாமி டாக்ஸியில் வந்து இறங்கியதும் ஒன்றாயிருந்தது.

மல்லிக்குளத்திலிருந்து ராகுகாலம் கழியும் மட்டும் காத்திருந்து புறப்பட்ட சிவஸ்வாமி கோஷ்டியினருக்கு ரயில் தவறிவிட்டது. அதற்கப்புறம் ஆறு மணி கழித்து வரும் வண்டி, மேலும் ஐந்து மணி தாமதமாக வர, அடுத்த ஜங்ஷனில் தொடர்பு வண்டி கிடைக்காமற் போகவே, பரிபூரணத்துக்கு ஒரு தந்தி அடித்து விட்டு, டாக்ஸியை ஏற்பாடு செய்தனர். அது இவ்வளவு நேரம் தாமதமாகி விட்டது!

“தந்தி கிடைத்துமா இப்படி....!”

“வரவே இல்லையே!” என்று பேராசிரியர் நாக்குழறினார்.

சிவசாமியின் கண்கள் சினத்தால் சிவப்பேறிவிட்டன.

“ஐயா ஆராய்ச்சி ஆசிரியரே! முகூர்த்தம் தவறி விட்டதே என்று அவசரப்பட்டு முன் பின் ஆராயாது திருமணத்தை முடித்து விட்டீர்கள். நீங்கள் ஆண்மகன்! ஒரு முகூர்த்தம் தவறினால் ஒன்பது முகூர்த்தம். எத்தனையோ பேர் பெண் கொடுக்க முன் வருவார்கள். என் பெண்ணின் கதியை நினைத்துப் பாருங்கள். விபரீதமாக வண்டி தவறி விட்டது, என் குற்றம்தான். ஆனால் 'எங்கேயோ சென்று கன்னிகாதானம் செய்து கொடுக்கப் போனார்கள். கல்யாணம் தடைப்பட்டு விட்டது' என்ற அவச் சொல்லும் ஊர்ப் புரளியும் சேர்ந்து கொண்டால் எந்த ஆண் மகன் இவளை மணம் செய்து கொள்ள முன் வருவான்!”



அவரது ஆவேசப் பேச்சை ஆமோதிப்பது போல், கோயில் ஆலாட்ச மணியும் ஆர்ப்பரித்தது. பேராசிரியர் பேச்சடைந்துப் போய்ச் சிலை போல் நின்றார்.

* * *

சிவஸ்வாமி எதிர்பார்த்ததற்கு மாறாக விரைவிலேயே சுகந்தவல்லியை மணம் செய்து கொள்ள அவரது பள்ளியிலே உபாத்தியாயர் வேலை பார்த்த பிள்ளையாண்டான் ஒருவன் முன்வந்தான். இந்தத் தடவை விவாகத்துக்குக் கோயிலைத் தேடிச் செல்லாமல் வீட்டு வாயிலிலேயே பந்தலைப் போட்டு 'ஜாம் ஜாம்' என்று நடத்தி விட்டார், சிவஸ்வாமி.

முப்பது வருடங்கள் உருண்டோ, உருளாமலோ ஓடி விட்டன. சுகந்தவல்லியின் ஒரே பையன் சீதாராமன் பேராசிரியர் பரிபூரணத்தின் பெண்ணை எங்கோ சந்தித்துக் காதல் புரிந்து கொண்ட விந்தைக்கு யார்மீது பழியைப் போட முடியும்!

சுகந்தவல்லி சிந்தனையிலிருந்து ஒருவாறு தலையை விடுவித்துக் கொண்டு, கடிதத்தை மடித்து வைத்தாள்.

அவள் மனத்தில் போராட்டம்.

ஆனால் சுகந்தவல்லியும் மகன் சார்பிலேயே 'ஓட்டு'ப் போட்டாள் என்றால் அதற்குக் காரணம் தளிர்விட்ட தாய்மையோ, பெருக்கெடுத்த அன்புப் பிரவாகமோ அல்ல. அவள் முன்பு பேராசிரியருக்கு இழைத்து விட்ட அநீதிக்குப் பிராயச்சித்தமாகத்தான்!

“பிராயச் சித்தமா! இது என்னய்யா புதிர்!”

பேராசிரியர் விஜயத்துக்கு முன்பே சுகந்தவல்லி தன் தகப்பனார் கீழ் வேலைபார்த்து வந்த சுந்தர வாலிபப் பையன்மீது காதல்கொண்டு விட்டாள். பரிபூரணத்தின் உத்தியோக உயர்விலும், படிப்பிலும் மனத்தைப் பறிகொடுத்த சிவஸ்வாமி அவள் தேர்ந்தெடுத்துள்ள வரனை ஒதுக்கி விடுவார் என்பது உறுதி. எவ்வாறோ முகூர்த்தத்தைத் தடைசெய்து விட்டால், அபசகுனம் போன்ற அந்த நிகழ்ச்சிக்குப் பிறகு எப்படியேனும் அப்பாவின் மனத்தைக் கரைத்து விடலாம் என்று நம்பினாள். அதை ஒட்டி ரயிலைத் தவற விடும் வண்ணம் வீட்டில் கடியாரத்தின் முட்களைப் பின்னுக்குத் தள்ளி விட்டாள். சிவஸ்வாமி கொடுக்கச் செய்த தந்தியையும் அவருக்குப் பின் சென்று அடிக்காமற் திருப்பி வாங்க ஏற்பாடு செய்தாள்.

இவ்வளவு துணிந்தும், இந்த முகூர்த்தம் தப்பினால் அடுத்த முகூர்த்தம் எப்படியோ என்று அவள் பயப்பட்டதற்கு மாறாகப்

பேராசிரியர் மணக்கோலத்தில் காட்சி அளிக்கவே அவள் காரியம் எளிதாகி விட்டது!

அளவிறந்த காதலுடனும் நல்லெண்ணத்துடனும் மணம் செய்துகொள்ள முன் வந்த பேராசிரியர் மீது அவளுக்கு என்றுமே அனுதாபம் உண்டு. அந்த நாளில் சுயநலத்தைக் கருதித் தெரிந்தே புரிந்துவிட்ட குற்றத்தைத் துடைத்துக் கொள்ள, இப்போது பொன்னான சந்தர்ப்பம் கிடைத்துள்ளது.

ஒரு முடிவுக்கு வந்தவளாய், சுகந்தவல்லி கணவன் இருந்த அறைக்குச் சென்றாள். அடுத்த அரை மணிக்கெல்லாம் சீதாராமனின் தகப்பனார் தபாலாபீஸை நோக்கி வேகமாக நடையைக் கட்டினார்.

“என்ன, பையனுக்குக் கல்யாணமா! நமக்கெல்லாம் சாப்பாடு உண்டுன்னுசொல்லுங்க!” என்ற பழைய ஹாஸ்யத்தை உதிர்த்துவிட்டு டெலிகிராபிஸ்ட் நாயுடு சமிக்ஞை யந்திரத்தில் தாளம் போட்டுக் கொண்டே எழுத்தை இசையாக்கிக் கொண்டிருந்தார்.

* * *

இப்பொழுதெல்லாம் தனது இசைத் திறனை வெளியிட நளினா மேடையைத் தேடுவதில்லை. வீட்டிலேயே அமர்ந்து அவள் பாடி முடித்த மறு கணமே சீதாராமன் 'பலேபேஷ்' என்று ஆர்ப்பரித்துக் கொண்டு தனது உளங்கனிந்த தீர்ப்பை அவளது பாடும் அதரங்களில் வழங்கி விடுவது வழக்கமாகி விட்டது!

## டி.கே.சி.யின் கடிதங்கள்

திருக்குற்றாலம், தென்காசி
23—4—52

கறிகாய்த் தோட்டம் ஒன்று இருக்கிறது. கறிகாய் வாங்கப் பலரும் போகிறார்கள். உத்ஸாகமாகப் போகிறார்கள். மடி நிறையக் கறிகாய்கள். புடலங்காய், அவரைக்காய், கத்திரிக்காய் என்று வாங்கி வருகிறார்கள். விஷயம் விளங்குகிறது. வயிறு நிறைகிறது.

ஆனால் கோயில் நந்தவனம் காலை மாலை போய் வருகிறவர்கள் காரியம் விளங்குவதில்லை. வயிற்றோடு கிற்கிற காரியமா, நந்தவனம். ஒரு பூவையும் தின்ன முடியாது. ஆகவே நந்தவனத்தையும் நந்தவனம் போகிறவர்களையும் கேவலமாய் எண்ணுகிறார்கள் சாப்பாட்டு ராமன்கள்.

காவியம் என்றால் நந்தவனம்தான். செடியை வைக்கிறார்கள். உரம் வைக்கிறார்கள். எல்லாம் மிக்க சிரத்தையோடுதான். எதற்கு? பூவை உண்டாக்கத்தான். வேறு ஒரு லக்ஷியமும் கிடையாது.

கம்பர் ஒரு அற்புதமான நந்தவனம். யாது பிரயோசனமுமில்லை. விளைவதெல்லாம் அற்புதமான புஷ்பங்கள். நந்தவனத்துக்குச் சகலவிதமான உரமும் வைத்திருக்கிறது. அன்பு, பகைமை, இரக்கம், இரக்கமின்மை, ஞானம், அறிவீனம் எல்லாம் உரந்தான். பாஷை, தாளம் எல்லாம் வளமாய்ப் பாய்கிறது. எல்லாம் கலந்து சிருஷ்டி தத்துவமாக விளைகிறது. பிரம்மாவோடு அவைகள் போட்டி போடுகின்றன. பாவ மணங்கள் புதிது புதிதாய்க் கமழ்கின்றன. அநுபவிக்க அநுபவிக்க “பலே பேஷ்! நீ மநுஷன்” என்று முதுகைத் தட்டிக் கொடுக்கிறது. கறிகாய்கள் என்ன சொல்லும் நம்மைப் பார்த்து? “சரி, சரி! பிராணிகளோடு பிராணியாய் நிற்கிறாய். கல் மரம் இவைகளுக்கில்லாத ஆகாரத்தை உட்கொள்ளுதல், அதன் சுவையையும் உணர்தல் எல்லாம் இருக்கின்றன. ஆனால் உன்னை மநுஷன் என்று எப்படிச் சொல்ல முடியும்?” என்று கறிகாய்கள் முடிவு கட்டிவிடும்.

உபயோகமற்றது என்று சொல்லக் கூடிய புஷ்பத்தை அநுபவித்தால் புஷ்பம் சொல்லும், “பிராணிகளை விட்டுத் துண்டாய்த்தான் நிற்கின்றாய். நீ மநுஷன் தான்” என்று நம்மைத் தட்டிக் கொடுக்கும்.

அத்தனை வித்தியாசம் இருக்கிறது, உபயோகம் உள்ளதற்கும் உபயோகமற்றதற்குமிடையே. அப்படியேதான் நீதி போதிக்கும் செய்யுளுக்கும் கவிக்கும் இடையே வித்தியாசம்.

கம்பர் கவிகளை விளைத்தார். கதையோ நீதியோ எல்லாம் உரந்தான். இத்தனை வருஷங்களாய்க் கம்பரோடு பழகுவதில் இதுதான் தெரிய வரும். எல்லாவற்றையும் கவிதா தெய்வத்துக்கு அர்ப்பணம் செய்கிறார்.

“நீ சொன்ன சொல்லினும் உளன்.”

ஹிரண்யனது வார்த்தையே கடவுளது வார்த்தைதான் என்று சொன்னால் கடவுளையே கவிக்கு அர்ப்பணம் செய்கிறார் என்றுதான் அர்த்தம். எல்லாவற்றை அர்ப்பணம் பண்ணினாலும் ஒன்றை அர்ப்பணம் பண்ணவில்லை, அதாவது உண்மையை. அவருடைய உள்ளத்தில் பந்தோபஸ்தாய் இருக்கிறது உண்மை.

டி. கே. சிதம்பரநாதன்



எவ்வயதிலும்
எந்த
நிலைமையிலும்

இருமலை
பெர்ட்டுஸின்
"டெஷ்னர்"
நிறுத்துங்கள்



எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கிறது.

இடாபா லிமிடெட், ஷான்,
லீஷென்ஸ்டன் ஸ்விஸ் கண்டம்
அன்டு இகனுமிக் டெகிடெரி
இவர்களின் அனுமதியின்
பேரில்




இன்பா லிமிடெட் தபால் பெட்டி 1041,
பம்பாய்-1 இவர்களால் இந்தியாவில்
தயாரிக்கப்பட்டது.

# நிராலா

## சோப்



வெளுப்பதை
எளிதாக்குகிறது



வியர்க்க விறுவிறுக்க அடித்து, கசக்கி, தேய்த்து அவஸ்தைப்பட வேண்டாம். நிராலா சோப்பை உபயோகித்தால்; அதன் நிறைந்த நுரை துரிதமாக துணிகளுக்குக் கெடுதலில்லாமல் அழுக்கையும், கறைகளையும்போக்கும்



அடைப்புகள்
அற்றது

துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்
கர்நூல்

---

பிரதிநிதிகள் இல்லாத இடங்களுக்கு டிஸ்ட்ரிபியூட்டர்கள் தேவை

# சிவன் கீர்த்தனைகள்

ஸ்வர அமைப்பு: செம்மங்குடி சீனிவாச ஐயர்

கீர்த்தனம் 18     ராகம்: பைரவி     தாளம்: ஆதி

### பல்லவி

அத்தருணம் அபயங் கொடுத்தாண்
டருள்வாய் என் அம்மையப்பா

### அனுபல்லவி

பக்த பரிபாலகனே பரந்தாமனே
பாற்கடலில் பள்ளி கொண்ட பத்மநாபனே இரங்கி (அத்தருணம்)

### சரணம்

உத்தமப் பிறவியளித்தாய் ஊனமில்லாத
உடலும் அறிவும் கொடுத்தாய் - என்
எத்தனையும் நன்றி இல்லேனே பரந்தஅருள்
அத்தனையும் நான் மறந்தேன்.
பக்தியுமில்லையே சித்த சுத்தியுமில்லாக் கொடிய
பாவியானாலும் உன்னைவிட் டெவரிடம் செல்வேனய்யா (அத்தருணம்)

பைரவி ராகம் 20-வது மேளமான நடபைரவியில் ஜன்யமாக வகுக்கப்பட்டிருக்கிறது. பாஷாங்க ராகம். ஸம்பூர்ண ரக்தி ராகம். இந்த பைரவி ராகம் 72 மேளகர்த்தா முறை வருவதற்கு முன்னதாகவே இருந்து வந்த பிரஸித்தமான ராகங்களில் ஒன்றாகும்.

இதில் வரும் ஸ்வர ஸ்தானங்கள்: ஷட்ஜம், சதுச்ருதி ரிஷபம், ஸாதாரண காந்தாரம், சுத்த மத்யமம், பஞ்சமம், சுத்த தைவதமும் சதுச்ருதி தைவதமும், கைசிகி நிஷாதம்.

இதன் ஆரோஹணத்தில் சதுச்ருதி தைவதம் ஆனதால் இது பாஷாங்க ராகம். இந்த ராகத்தில் தாரஸ்தாயி ஷட்ஜம் போகும்பொழுது சதுச்ருதி தைவதமும் கைசிகி நிஷாதத்தை உயர்த்தியும் பிடித்துப் பாடுவதும், மத்யஸ்தாயி நிஷாதம் வரை உள்ள ஸஞ்சாரங்களில் விசேஷ சுத்த தைவதப் பிரயோகமும் கைசிகி நிஷாதம் சற்றுக் குறைவாகவும் பிடித்துப் பாடுவதும் சம்பிரதாயமாகும்.

### பல்லவி     1 களை

| | | | |
|---|---|---|---|
| 1 | ஸா ; ; ஸ் நி தா பா மா மா | பா நீ தா பா | ப ம கா ரீ ஸா ‖ |
| | அ - - த்த - ரு ணம் அ ப | யம் - கொ டு | த்தா - - ண்ட ருள் |
| | ரீ , நி ஸா ரீ கா மா மா ; | பா ; ; ; | ; ; ம ப த நி ‖ |
| | வா - - யென் ன ம் மை ய - | ப்பா - - - | - - - - - - |
| 2 | ஸா ; ; ஸ் நி தா பா மா பா | *த நி ஸ்ரிஸ் நி த பா | ம க ப ம க ரி ஸா ‖ |
| | அ - - த்த - ரு ணம் அ ப | யம் - - - கொ டு | த்தா - - - ண்டருள் |
| | ரி ஸ நி ஸா ரீ கா மா மா ; | ம ப *த நி ஸ் நி த ப | ம க ரி க ம ப *த நி ‖ |
| | வா - - யென் ன ம் மை ய - | ப்பா - - - - - - - - | - - - - - - - - |
| 3 | ஸா, ரிக்ரி,க் ரிஸ்ரி நீ த ப மா பா | *த நி ஸ்ரிஸ் நி த பா | ம க ப ம க ரி ஸா ‖ |
| | அ - - - - - - த்த - - - ரு ணம் அ ப | யம் - - - - கொடு | த்தா - - - ண்டருள் |
| 1 | ரி ஸ நி ஸா ரீ கா மா மா ; | பா ; ; ; | ; ; கா க ப ‖ |
| | வா - - யெ ன்ன ம் மை ய - | ப்பா - - - | - - அ ரு ள் |
| 2 | ம க ரீ ஸா ரீ கா மா மா ; | பா ; ; ; | ; ; ஸ் நி த ப ‖ |
| | வா - - யெ ன்ன ம் மை ய - | ப்பா - - - | - - அ - ருள் |
| | ப ப ம க ரி ஸ ரீ கா மா மா ; | பா ; ; ; | ; ; ; ; ‖ |
| | வா . . - யெ ன் ன ம் மை ய - | ப்பா - - - | - - - - |

### அனுபல்லவி

| | | | |
|---|---|---|---|
| 1 | ; ப மா ப *தா நீ ; ஸா ரி | ஸா ; ; *த நி | ஸ் ரி ரி ஸ் நி த பா ‖ |
| | - ப க்த ப ரி பா - ல க | னே - - ப - | ர ந் தா - - ம னே |
| 2 | ; ப மா ப *தா நீ ஸா ரி க் ரி | ஸா ; ; *த நி | ஸ் ரி ரி ஸ் நி த பா ‖ |
| | - ப க்த ப ரி பா - ல க - | னே - - ப - | ர ந் தா - - ம னே |




அப்பாவும் அம்மாவும் எனக்காக வந்த ஜாதகங்களை ஆராய்ச்சி செய்தவண்ணம் இருந்தனர். ஆனால் நான் என்னமோ தெய்வயானையைத்தான் மணம் புரிவது என்று தீர்மானித்து விட்டிருந்தேன். அது என்னுடைய அம்மாவின் செவிகளுக்கு எப்படியோ எட்டி விட்டது. ஒருவேளை என் தங்கை மங்கையற்கரசி என்னுடைய நடவடிக்கைகளைக் கவனித்து அம்மாவிடம் சொல்லி விட்டாள் போலும்!

அம்மா உடனே அலறிப் புடைத்துக் கொண்டு வந்து, "முருகவேள்! நான் கேள்விப்பட்டது உண்மையா? இது வேண்டாமே, அப்பா!" என்று கெஞ்சாத வகையில் கெஞ்சினாள்.

ஆனால், என் மனம் முழுதும் அப்பொழுது இந்த மாயக்கள்ளி தெய்வயானையின் நினைவால் நிரம்பிக் கிடந்தது. அம்மாவைப் பற்றிய உணர்ச்சியே எனக்கு அப்பொழுது இருக்கவில்லை.

அம்மா மேலும் சொன்னாள்: "உனக்கும் அவளுக்கும் பெயர்ப் பொருத்தம் தவிர வேறு பொருத்தமே கிடையாது. உனக்கும் சம்பாத்தியம் குறைவு. ஆனால் சுகத்தை அதிகமாகத் தேடும் சுபாவம். பிடிவாத குணமும்கூட. நீ தேர்ந்தெடுத்திருக்கும் பெண்ணோ படித்தவள். வேலை செய்பவள். சதா வெளியே போவதும் வருவதுமாயிருப்பாள். உன்னை லட்சியம் செய்து வீட்டை நடத்தி உன் தேவைகளை எப்படிக் கவனிக்கப் போகிறாள்? உனக்கு ருசி ருசியாகச் சமைத்துப் போடவேண்டுமே? அது அவளால் ஆகும் காரியமா?" என் தாயார் சொன்னதெல்லாம் அப்பொழுது என் காதில் ஏறவில்லை. அது இப்பொழுது எவ்வளவு உண்மையாகி விட்டது என்று நான் வருந்தினேன்.

அம்மா விஷயத்தை அப்பாவிடம் சொல்ல, அவர் ஒரே ஆத்திரமாய் என் காதலைப் பற்றிக் கேலி செய்தது இன்னமும் என் செவிகளில் ஒலித்துக் கொண்டிருக்கிறது. அன்று அது நாராசம்போல் பட்டது. ஆனால், இன்று அது அப்படியே நடைபெற்று வருகிறதே! தெய்வயானை என்னை மதித்து நடக்க மாட்டாள் என்று அவர்கள் சொன்னது நேர்ந்தே போயிற்றே! "ஒரு பி.ஏ., பி.டி. படித்த பெண்ணிடம் காதலும் பெண்மையும் இருப்பதை விடச் சுதந்திர உணர்ச்சியும் அடங்காத்தனமும் இவ்வளவு தூரம் அளவு கடந்து காணப்படும் என்று நான் அறியாது போனேனே!" என்று நினைத்துப் பின்னும் வருத்தமுற்றேன்.

அம்மாவைச் சமாதானப் படுத்துவதற்காக அப்பா கேலியாக, "ஏன் மீனாட்சி, நீ எதற்கு வருத்தப்படுகிறாய்? உன் பையன் சம்பாத்தியக் குறைவாயிருப்பதால் தன்னை விட அதிகமாகச் சம்பாதிக்கும் பெண்ணைத் தேர்ந்தெடுத்திருக்கிறான். மனைவிக்குச் சமைக்கத் தெரியாமற் போனால் அவனே சமைத்துப் போடுவான். அவனுக்குத்தான் நீ ருசி ருசியாகச் சமைக்க வேறு சொல்லிக் கொடுத்திருக்கிறாயே! தவிர, இது பழைய காலமில்லை. ஆணும் பெண்ணும் சமம். யாருக்கு எது சௌகரியமோ அப்படி வேலை செய்து பிழைத்துப் போவார்கள்" என்றெல்லாம் பேசினாரே, அதுமாதிரியே அல்லவோ இப்பொழுது ஆகிவிட்டது என்று எண்ணி எண்ணி மனம் வெதும்பினேன்.

எனக்கு அப்பொழுது தெய்வயானையை மிகவும் பிடித்தது. அவள் சாமர்த்தியங்களையோ, குணங்களையோ நான் ஆராய்ச்சி செய்யவில்லை. அதை அறிந்து கொள்ளவும் விருப்பம் இருக்கவில்லை. என் விருப்பப்படியே தெய்வயானைக்கும் எனக்கும் திருமணம் நடந்தது.

புது வீட்டுக்குக் குடி போனோம். அப்பொழுது அம்மா 'ஒரு நாள் பாலைப் பொங்கவிட்டுப் பிறகு குடித்தனம் ஆரம்பியுங்கள்' என்றாளே! நான் அதை அலட்சியம் செய்தது எவ்வளவு தூரம் தவறு! மதனி அகிலாண்டத்தையும் அழைக்கவில்லை. தங்கை மங்கையர்க்கரசிக்குச் சொல்லவில்லை. நானும் என் தெய்வயானையும் தனிமையில் இருக்கவேண்டும், மற்றவர்களுடைய சம்பந்தம் அந்த இன்பத்தைக் கெடுத்து விடக்கூடாது என்ற ஓரே பேராசைதான் அப்பொழுது என் மனத்தைக் கௌவிக் கொண்டிருந்தது! நான் எவ்வளவு சுயமரியாதை அற்றுப் போயிருந்தேன்! ஆனால் அந்தப் பெண் இப்பொழுது என்னை மதிக்கிறாளா? காலையில் இரண்டு டியூஷன், இதன் நடுவே பள்ளிக்கூட வேலை, வேறு ஏதேதோ சமூகப்பணிகள், வருவார் போவார் விசாரம், தோழர்களின் வரவு,—இவ்வளவு வேலைகளை வைத்துக் கொண்டிருக்கிறாளே! மனைவியின் கடமை அத்துடன் முடிவடைந்து விடுகிறதாக எண்ணம் போலும். சம்பாதித்து விடுவதாலோ, அல்லது வீடு வைத்திருப்பதாலோ ஒரு புருஷன் திருப்தி யடைந்து விடுவான் என்ற நினைப்போ! அவனுக்குத் தேவையானது எது என்றே அறியாமற் போய் விட்டாளே! கணவனுக்கு இதமாக நடப்பதே மனைவியின் முதல் கடமை என்று தெரிந்துகொள்ள வில்லையே என்று மனம் புழுங்கினேன்.

புது வீட்டுக்குக் குடிபோன மறுநாள் விடியற்காலை அவள் வெகு அவசரமாகப் படுக்கையை விட்டு எழுந்து ஓடினாள். நானும் அவளுக்கு உதவி செய்ய நினைத்துப் பின்னோடு எழுந்திருந்தேன். அவள் ஸ்நான அறைக்குள்ளிருந்து வெளியே வருவதற்குள் வேலைக்காரியின் உதவியால் கும்மட்டியைப் பற்ற வைத்துக் காப்பி தயாரித்து விட்டேன். பிறகு அதை ஒரு கோப்பையில் ஊற்றி அவளிடம் எடுத்துப் போய், "என் இதய ராணியே, இதோ காப்பி தயாராக இருக்கிறது, சாப்பிடலாம்" என்று சொல்லி அவளை மகிழ்வித்தேன்.

காப்பியைச் சாப்பிட்டு விட்டுச் சமையலறைக்குள் சென்று சிறிது நேரத்துக்குள் வெளியே வந்து, "என் இதய ராஜாவே, இதோ சாப்பாடு தயாராகி விட்டது. சாப்பிட வாருங்கள்" என்று அழைத்தாள்.

நான் ஆச்சரியப்பட்டு, "என்ன சொல்லுகிறாய்? அதற்குள் சமையல் ஆகிவிட்டதா? அதெப்படி முடியும்? ஏதாவது மந்திரமா?" என்று கேட்டேன்.

"ஆமாம், 'பிரஷர் குக்கர்' என்ற மந்திர பாத்திரம் இருக்கிறதே!" என்று கிளி கொஞ்சுவது போலப் பதில் சொன்னாளே, அந்தத் தெய்வ யானையா இப்பொழுது இப்படி மாறி இருப்பவள்?

ஒரு நாள் நான் வெயிலில் அலைந்து திரிந்து வாடி வதங்கி, கையில் காசில்லாததால் நடந்து சோர்வோடு வீடு வந்து சேர்ந்தேன். தலைவலி மண்டையைப் பிளந்து கொண்டிருந்தது. எழுந்திருக்க முடியவில்லை. மனைவி காப்பி கொண்டு வருவாள் என எதிர்பார்த்தேன். ஐந்து நிமிஷமாயிற்று, பத்து நிமிஷமாயிற்று. அவள் அடுத்த அறையில் தானிருந்தாள். தன் தோழிகளுடன் ஏதேதோ கலகலவெனப் பேசிக் கொண்டிருந்தாள். காப்பி வரவில்லை. நான், "தெய்வயானை, காப்பி ஆகிவிட்டதா?" என்று கேட்டுவிட்டேன். பார்க்க வேண்டுமே அவள் சிணுங்கலை! பிரமாதமான கோபத்துடன் என்னிடம் வந்தாள். "கூச்சல் போடாதீர்கள்" என்று அதிகாரம் செய்து விட்டுப் போனாள். இவளா அந்தப் பழைய தெய்வயானை? இது நினைவு வந்ததும் எனக்கு வாழ்க்கையில் ஒரு வெறுப்புத் தோன்றியது.

இப்பொழுதுதானே அவள் தன் சுய உருவத்தோடு காணப்படுகிறாள்! அந்த விசுவரூபம் படிப்படியாக எவ்வளவு விரைவில் வளர்ந்து உருவமெடுத்தது! முதலில் அவள் 'வேலைக்காரி வேண்டாம், வேலைகளை நாமே செய்து கொள்ளலாம், அதனால் செலவு மிச்சம்' என்றாள். பிறகு 'கடை கண்ணிக்கு நாமே போகலாம். எனக்கு நேரமில்லா விட்டால் நீங்களே சாமானை வாங்கி வந்து விடுங்கள்' என்றாள். 'தோட்டம் போடுவோம், காய் கறிச் செலவும் மிச்சப்படும். ருசிருசியாகப் பதார்த்தமும் கிடைக்கும்' என்றாள். பிறகு மெதுவாக, 'நீங்கள் ஆண் பிள்ளை, ஆபீசுக்கு நடந்தே போய் வாருங்கள். காசு மீதிப்படும்' என்றாள். அதற்கும் மேல் 'வெளியே டீ, காப்பி, பலகாரம் வேண்டாம். வீட்டுக்குச் சீக்கிரமாக வந்து தயாரித்துச் சாப்பிடுங்கள்' என்றாள். இதற்குமேல் சினிமா முதலியவற்றைப் பற்றிக் கேட்பானேன்! இந்த உத்தரவுகளின் முடிவென்ன?

நான்தான் வீடு பெருக்கிப் பாத்திரங்களைத் துலக்கித் தண்ணீர் எடுக்கவேண்டும்; கடை கண்ணிகளுக்குப் போக வேண்டும்; சமையல் செய்ய வேண்டும்; மண்ணைக் கொத்திக் காய்கறிகளைப் பயிராக்க வேண்டும். வேறு சில்லறை வேலைகளும் உண்டு. இவ்விதம் என் வேலை வளர்ந்தது. அவள்

# நான்தான் டீ

சரியான
வழியில் என்னை
அநுபவியுங்கள்



லட்சோப லட்சம் வீடுகளில் நான் விரும்பப்பட்ட போதிலும், எனது உபயோகர்கள் பலருக்கு என்னிடமிருந்து முழுப்பயனையும் பெறத்தெரியவில்லை.

“5 பொன் விதிகளை” பின்பற்றினால் சோர்வகற்றும் சிறந்த பானமாக நான் பயன்படுவேன் என்று, என்னை வருஷக்கணக்காக, கவனமாய்க் கையாண்டவர்களுக்குத் தெரியும்.

ஆகவே வீடு, ஆபீஸ், பாக்டரி, கிளப் அல்லது சிற்றுண்டிச்சாலையில் என்னை நீங்கள் அருந்தும்போது, இந்த “5 பொன் விதிகள்” இருப்பதை சமையலறையில் உள்ளோருக்கு ஞாபகப் படுத்துங்கள்.

## 5 பொன் விதிகள்

1. [illegible]
2. [illegible]
3. [illegible]
4. [illegible]
5. [illegible]

நான்தான் டீ — 5 பொன் விதிகளால் சிறந்த பானம் ஆவேன்





## பூரண வாய் சுத்தத்திற்கென தயாரிக்கப்பட்டது

- கிருமிகள் அகற்றப்பெற்ற நைலான் முடிகள்.
- அழகிய பிளாஸ்டிக் பிடியில் நன்கு இணைக்கப்பட்ட முடிகள்.
- உங்கள் பற்களுக்கான உருப்பெற்றது; சுலபமாக சுத்தம் செய்கிறது.
- மிருதுவான சுத்தி—பல்லின் எனாமலை பாதிக்காது.
- மெதுவான முறையில் ஈறுகளை பலப்படுத்துகிறது.

**அதிக பலனுடன்!**

பற்களைப் பூரணமாக சுத்தம் செய்கிறது. ஈறுகளை மிருதுவாக தடவி விடுகிறது.

மூன்று அளவுகள்: பெரியவர்களுக்கு, சிறியவர்களுக்கு, குழந்தைக்கு • ஹார்ட் • மீடியம் • ஸாப்ட்

# கால்கேட்

## நைலான் டூத் பிரஷ்

## மலிவு—நீடித்த உழைப்பு

---

## அந்த இருமலை நிறுத்துக-

**தொண்டை ரணத்தை சமனமூட்டி குணப்படுத்துக. மார்பு மற்றும் சுவாசப்பை அடைப்பை நீக்குக. எல்லாம் க்ஷணத்தில் முடிக்க.**




# PEPS

பெப்ஸ் சாப்பிடுங்கள்.



உலக பிரசித்தி பெற்ற
தொண்டை, மார்புவலி நிவாரண மாத்திரைகள்.
எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

பெப்ஸ் தொண்டை, மார்புவலி நிவாரண மாத்திரைகளில் சமனமூட்டி, குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை சுவைக்கும்போது இந்த ரசங்கள் ஆவியாக மாறி ஸ்வாசத்துடன் தொண்டை, சுவாசக்குழாய் மூலமாக சுவாசப் பைக்குள் செல்லும் நோயின் ஆரம்ப ஸ்தானத்திற்கே சென்று வேலை செய்கின்றன. இதனால்தான் பெப்ஸ் கைகண்ட ஔஷதமாயும் உலக பிரசித்தி பெற்றும் விளங்குகின்றது. பெப்ஸ் இருமலை நிறுத்தி, தொண்டை ரணத்தை சமனமாக்கி, கபத்தை உடைத்து அடைப்பை நீக்குவதுடன் இன்ப்ளுயன்ஸா மற்றும் பிரசங் [illegible] சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.

---

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்

மீதுள்ள ஆசையால் ஆரம்பத்தில் நான், வியர்வை வழிய, மூச்சுத் திணற, அவள் என் என்பதற்கு முன் எண்ணெயாக நின்றேன். நான் வேலைகள் செய்யும் பொழுது அவள் ஒய்யாரமாக ஏதோ ஒரு நாவலின் சுவாரஸ்யமான பகுதியொன்றை எனக்குப் படித்துக் காட்டிச் சிரிப்பூட்டு வாள். அல்லது குயிலினுமினிய குரலில் ஒரு பாட்டின் அடியைப் பாடி இன்ப மூட்டுவாள். 'அவளுக்குத் தான் என்ன சாதுர்யம்! எவ்வளவு சாமர்த்தியம் இருக் கிறது!' என்று அவள் மீது எனக்கு அபாரக் கோபம் வந்தது.

பிறகு திடீரென்று ஒருநாள் இந்த ஏற் பாடுகளைச் சிறிது மாற்றிவிட்டாள். 'இனி நீங்கள் மத்தியானச் சிற்றுண்டி வெளியில் வைத்துக் கொள்ளுங்கள்' என்று சொல்லி ஓரளவு பணத்தை எனக்குக் கொடுத்தாள். 'இனி காலையில் ஒரு வேளை சமைத்து அதை இரவுக்கும் வைத்துக் கொண்டால் போதும். நான் சிறிது நாட்கள் வரை காலையில் வெளியே போனால் இரவுதான் வீட்டுக்குத் திரும்ப முடியும்' என்றாள். எனக்கு அவளுடைய அதிகாரத்தைக் கண்டு கோபம் பொத்துக் கொண்டு வந்தது. "ஏன் அப்படி?" என்று பதிலுக்குக் கேட்டு விட்டேன். அப்படி நான் கேட்டது அவளுக்குத் துளிக் கூடப் பிடிக்கவில்லை. அதற்குப் பதிலும் சொல்ல வில்லை.

ஒரு சமயம் அவள் 'எனக்கு வகுப்புப் பரீட்சை' என்று விடியற்காலையிலேயே வெளியே போய் விட்டாள். நான் சமையல் செய்ய ஆரம்பித்தேன். வராத விருந் தாளிகள் சரியான சமயம் பார்த்து வருவது வழக்கந்தானே? அந்த மாதிரி எனது நண்பர் சாம்பு அந்தச் சமயம் பார்த்து வீட்டுக்கு வந்து சேர்ந்தார். 'அடுப்பு உத்தியோகமா? ஆட்கள் இல்லையோ, ஏதோ அடுப்பில் தீய்கிற வாசனை வரு கிறதே!' என்றெல்லாம் கலாட்டா செய் தார். பிறகு அவர் ஒரு யோசனை சொன்னார். 'ஏனய்யா, அடுப்படியில் இப்படி அவதிப்படுகிறீர்? ஓட்டலில் போய்ச் சாப்பிடுமய்யா' என்றார்.

அவர் வந்த நேரத்தைப் போலவே இருந்தது அவர் யோசனையும். என் பொரு ளாதார நிலையை அவர் கண்டாரா? சம்பா திக்கும் சொற்பப் பணத்தைச் சாப்பாடும் டிபனும் வெளியே வைத்துக்கொண்டு செல வழித்து விட்டால் பிறகு வீடு வேண் டாமா? மனைவியிடம் இரண்டு காசு கொடுக்காமற் போனால் பின்னர் அவளுக் கும் எனக்கும் இருக்கும் உறவுதானென்ன? அப்புறம் அவளுக்கு அசல் வேலைக்காரனாக வல்லவோ நான் மாறி விடுவேன்!

எனக்கு வரவர அவளைப்பற்றிச் சந்தேக மும் உண்டாகத் தலைப்பட்டது. அவள்



தேனருவி பாயும் திருக்குற்றாலத்தில் ரோட்டரி கிளப்பின் துவக்க விழா விமரிசையாகச் சமீபத்தில் நடந்தேறியது. விழாவுக்குத் தலைமை வகித்த திரு. ஜே. எல். பி. ரோச் விக்டோரியா அவர்களையும், விழாவுக்கு வந்திருந்தவர்களையும் விழா நிர்வாகிகளையும் மேலேயுள்ள படத்தில் காணலாம்.

---

இல்லாத நேரங்களில் அவள் மேஜை அலமாரிகளை ஆராய்வது, அவள் நடவடிக் கைகளைக் கூர்ந்து கவனிப்பது முதலியன செய்ய ஆரம்பித்தேன். அவள் இரவு வெகு நேரங் கழித்து வருவாள். அநேக தடவை களில் 'டாக்ஸி'யில் வந்து இறங்குவாள். நான் வண்டியருகே போய்ப் பரிசோதிப் பேன். சந்தேகத்துக்கு ஒன்றும் இடமிராது. நான் முழுக்க முழுக்க மனைவியின் அடிமை ஆளாகி விட்டேன்.

உள்ளூரில் பெற்றோர்கள் இருந்தார்கள். அப்படியிருந்தும் காதல் மணத்தின் சிக்கலைத் தீர்த்துக்கொள்ள வேண்டி அவர் களது உதவியை நாட நான் இதுவரையில் தயங்கினேன். அதன் விளைவுகளை ஏகாந்த மாகவே அனுபவித்தேன்.

அன்று என்னவோ எனக்கு என் தாயைப் போய்ப் பார்க்க வேண்டும் என்று ஆவல் உண்டாகிவிட்டது. அத்தனை நாளும் வீட்டுப் பக்கமே போகாத நான் அன்று தாயாரைப் பார்க்கச் சென்றேன்.

என் தாயார் மீனாட்சி அம்மாள் என்னைப் பார்த்துத் திடுக்கிட்டு விட்டாள். "ஏன் ஒரு மாதிரியிருக்கிறாய்? ஏன் இளைத்து விட்டாய்? தெய்வயானை ஏன் கூட வரவில்லை? அவள் சௌக்கியமா யிருக்கிறாளா? குடும்பம் சரியாக நடக் கிறதா? செலவுக்குப் போதுமான வரு வாய் இருக்கிறதா?" என்றெல்லாம் மனம் விட்டு விசாரித்தாள்.

என் மனத்திலுள்ளதை அப்படியே என் தாயின் முன் கொட்டிவிட விரும்பினேன். 'ஆனால் என் தாய் அதை அப்படியே நம்பு வாளா? என் குற்றங் குறைகளையும் விசாரிக்க ஆரம்பித்து விடுவாளே?' என்று நினைத்து நான் "தெய்வயானைதான் காலையி லிருந்து இரவு வரை உத்தியோகம், டியூஷன் வைத்துக் கொண்டிருக்கிறாளே!

காலையில் போனால் இரவுதான் வருகிறான்'' என்றேன் இரத்தினச் சுருக்கமாய்.

தாயாருக்கு விஷயம் விளங்கி விட்டது. ''அவன் சரியாகச் சமைத்துப் போடு கிறானா?'' என்று வினவினாள்.

நான் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டேன். ''அதுதானிருக்கிறதே, 'பிரஷர் குக்கர்'. வைத்த அடுத்த நிமிஷமே சமையல் ஆகிவிடுகிறது'' என்றேன்.

''செலவுக்குப் பணம் போதுமானதாக இருக்கிறதா?''

''அவன்தான் இரவு பகலாய்ச் சம்பாதித்து வருகிறானே?''

''நீங்கள் இருவரும் ஒற்றுமையாய் இருக்கிறீர்களா?'' என்று தாயார் சிரித்துக் கொண்டே கேட்டாள்.

நான் பேசவே யில்லை. பிறகு என் தாயார் என்னை அங்கேயே அன்று சாப்பிட்டு விட்டுப் போகும்படி சொன்னாள்.

அன்னையின் அன்பான உபசரிப்பு எனக்கு வெகு இதமாக இருந்தது.

**ம**று நாள் விடுமுறை. தெய்வயானையும் நானும் வீட்டில்தானிருந்தோம். வெவ்வேறு மூலையில் அமர்ந்து எங்களுக்குப் பிடித்தமான வேலைகளில் அமர்ந்திருந்தோம். அந்தச் சமயம் எங்கள் வீட்டுக்கு என் தாயார் எதிர்பாராமல் முதன் முதலாக வந்தாள். எனக்கு ஒரே பட படப்பு உண்டாகிவிட்டது. ஆனால் தெய்வயானை தன் மாமியாரை வெகு மரியாதையாக வரவேற்று உபசரித்தான்.

பிறகு மாமியருகே உட்கார்ந்தான். எனக்குச் சந்தேகம் வரத் தொடங்கியது. 'இந்த நீலிப் பெண் இப்பொழுது என்ன வேஷம் போட நினைத்திருக்கிறான்? ஆ! ஏன் அவன் அம்மாவின் மடியில் முகத்தைப் புதைத்துக் கொண்டு விக்கி விக்கி அழுகிறான்? அவளுக்கு வருத்தம் துக்கம் என்பதெல்லாம் கூட உண்டா, என்ன?' என்று சிந்தித்தேன்.

அம்மாளிடம் அவள் என்னைப் பற்றி ஏதோ புகார் சொல்லத் திட்டம் போட்டிருக்கிறாள் போலும் என்று தோன்றியது. ஒரு வேளை, நான் அவளுடன் பேசுவதில்லை, நேரம் கழித்து வீட்டுக்கு வருகிறேன், இஷ்டப்படி யிருக்கிறேன் என்றெல்லாம் குற்றம் சொல்லுகிறாளோ? அவன் செய்து காட்டுவதைத்தானே நான் செய்து வருகிறேன். இதற்கு ஏன் மாய் மாலக் கண்ணீர்! அட, அட! ஏது! அம்மா அவன் தலையைத் தடவி, முகத்தை வருடி, திருஷ்டி சொடுக்குகிறாளே! எனக்கு ஒன்றுமே புரியவில்லை.

அம்மா எங்கள் இருவரையும், ''இன்று இரவு நீங்கள் இரண்டு பேரும் நம் வீட்டுக்குச் சாப்பிட வாருங்கள்'' என்று அழைத்துவிட்டுப் போனாள்.

என்னுடைய மனம் மாறியிருந்தது. என்ன காரணத்தாலோ என் மனைவியிடம் நெருங்கி நின்று பேச வேண்டும் என்று ஒரு ஆவல் உண்டாயிற்று. ஒருவேளை அவன் வருத்தப்பட்டதை என்னால் தாங்க முடியாததுதான் காரணமா யிருக்கலாம். ஆனால் என்னால் அவன் நினைத்தமாதிரி நடந்து கொள்ள முடியவில்லை.

**மா**லையில் தெய்வயானை அலங்கரித்துக் கொண்டு மாமியார் வீடு செல்லத் தயாராகி யிருப்பதைக் கண்டு நானும் தயாரானேன். ஒருவருடன் ஒருவர் பேசிக் கொள்ளாமலேயே இருவரும் ஒருவர் பின் ஒருவராகப் 'பெரிய வீடு' சென்றோம்.

என் தாயார் எங்களுக்குப் பெரிய விருந்து ஏற்பாடு செய்திருந்தாள். மங்கையர்க்கரசி தெய்வயானையிடம், ''மதனி, நீங்கள் எங்களுக்குச் சொல்லாமலே ரகசியமாக வைத்திருக்கப் பார்த்தீர்களா? ஆனால் எங்களுக்கு முன்னமேயே தெரிந்து போயிற்று'' என்று என் மனைவியைக் கேலி செய்வதை நான் கவனித்தேன்.

அதற்குள் அகிலாண்டமும் அங்கு வந்து, ''ஏன் தெய்வயானை, நீ தொட்டில், மெத்தை, கொசுவலை, துணிமணி எல்லாம் முன்பே வாங்கித் தயாராக வைத்திருக்கிறாயாமே? உன் மாணவிகள் என் பெண்ணிடம் சொன்னார்களாம். ஏன் எங்களுக்கு விஷயமே சொல்லாமலிருந்தாய்? நாங்கள் வந்து உனக்கு எல்லாம் செய்யமாட்டோமா?'' என்றான்.

இதைக் கேட்டதும் எனக்கு விஷயம் வெட்ட வெளிச்சமாகி விட்டது. தெய்வயானையின் முகமும் நாணத்தால் 'குப்பீர்' எனச் சிவந்தது.

'என் தெய்வயானையைப் பற்றி இல்லாததும் பொல்லாததும் நினைத்தேனே' என்று மனம் வருந்தினேன்.

**ம**றுநாள் நான் என் வீட்டில் வெகு உற்சாகமாக இருந்தேன். தெய்வயானை எழுந்த உடன் நானும் எழுந்திருந்தேன். கும்மட்டி பற்றவைத்துக் காப்பி தயாரித்தேன். கோப்பையில் ஊற்றி எடுத்துக் கொண்டு என் மனைவியிடம் சென்று, ''என் இதய ராணியே, இதோ காப்பி கொண்டு வந்திருக்கிறேன், சாப்பிடலாமோ!'' என்று ஆனந்தமாக வேண்டிக் கொண்டேன். தெய்வயானையும் மலர்ந்த முகத்துடன் ''ஆமாம், இன்று நாம் மறுபடியும் புது வாழ்க்கை ஆரம்பித்திருக்கிறோமல்லவா?'' என்று கூறினாள்.

''அத்துடன் இல்லை. ஒரு விருந்தாளியும் கூடிய சீக்கிரத்தில் வந்து நம்முடன் தங்குவார் இல்லையா?'' என்று சொல்லிக் கலகலவென்று சிரித்தேன்.

**(ஒரு ஆங்கிலக் கதையைத் தழுவியது.)**




# பொங்கற் பரிசு

குப்புசாமியின் கையில் இரண்டு ரூபாய் இருந்தது. மாதம் மாதம் தகப்பனார் அனுப்பி வந்த பணத்தில் கொஞ்சம் மிச்சம் செய்து வந்தான். சென்னைப் பட்டணத்தில் பெரிய பள்ளிக்கூடத்தில் சேர்ந்து நான்கு மாதங்களாயிற்று. இரண்டு ரூபாய் சேர்ந்தது. இதைக்கொண்டு போய் ஏதாவது அழகான சாமான் வாங்கி ஊரில் மாமா மகள் அல்லிக்கு அனுப்ப வேண்டும் என்று சினபஜாரில் கடை கடையாகப் பார்த்துக் கொண்டே போனான்.

அல்லி எதை விரும்புவாள், அவளுக்கு எது பிடிக்கும், என்று யோசித்த வண்ணம் மெதுவாகக் கடைகள் ஓரம் பார்த்துக் கொண்டே சென்றான்.

கடைக்காரர்கள் "வாங்கோ — ஸார் — இதோ நல்ல பேனா — சீப் — ஸார்—பவுன்டன் பேனா" "இந்தாங்கோ சார் இருக்கிறது உங்களுக்கு வேண்டிய ப்ரஷ்" "இந்தாங்கோ ஸார், என்ன வேண்டும்?" "இந்தாங்கோ நல்ல ஸென்ட் தைலம், அங்கே போகாதேங்கோ" என்று அவர்கள் வழக்கம் போல் கூப்பிட்டழைத்தார்கள். குப்புசாமி சும்மா பார்த்துக் கொண்டே பேசாமல் நடந்தான். அவன் பார்த்த சாமான்களில் ஏதும் அல்லிக்குப் பிடிக்கும் படியானதாகக் காணப்படவில்லை.



"இவர் நாட்டுப்புறத்து ஆள், உங்களுக்குத் தெரியவில்லையா?" என்று கடைக்காரர்கள் கேலி செய்தார்கள்.

ஹாஸ்டலில் போய்ச் சேர்ந்தான்.

காகிதத் தாள் எடுத்து ஒரு கடிதம் எழுதினுன்.

"அல்லி! உனக்குப் பிடித்த சாமான் ஏதாவது வாங்கி அனுப்பலாம் என்று கடையெல்லாம் பார்த்தேன். ஏதும் சரியாகப் படவில்லை. என் உள்ளம் ஒன்றே உனக்கு அனுப்பக்கூடிய சாமான். அதைத் தபாலில் அனுப்ப முடியாதே!" என்று பொங்கலுக்குப் போய்ச் சேர ஒரு கடிதம் எழுதித் தபால் பெட்டியில் போட்டான்.

அன்பைப் போன்றது வேறு என்ன பரிசு இருக்கிறது? அதிலும் அத்தானுடைய அன்பைப் போல் வேறு எந்தப் பரிசு கடையில் வாங்கியது அல்லிக்குப் பிடிக்கும்?

கடிதத்தைத் தபால்காரன் கொண்டு வந்ததும் வாங்கிப் படித்தாள் அல்லி. கொண்டுபோய் யாருக்கும் காட்டாமல் தன் பெட்டியில் துணிகளுக்குக் கீழே பத்திரமாக யாருக்கும் காணுதபடி மூடி வைத்தாள். மறுநாளும் எடுத்துத் தனியாகப் படித்தாள். மடித்து மறுபடியும் பெட்டியில் வைத்தாள். அடுத்த நாளும் அப்படியே செய்தாள்.

எப்படியோ தம்பி முத்துசாமி இதைக் கண்டு கொண்டு விட்டான். பெட்டிக்குப் பூட்டு இல்லை. ரகசியமாக எடுத்து அவனும் படித்து விட்டுப் பெட்டியில் துணிகளுக்கு அடியில் முன்போல் வைத்து விட்டான்.

"அம்மா! அல்லிக்கு அத்தான் கடிதம் எழுதியிருக்கிருன்" என்ருன்.

தாயார் சிரித்தாள். "அதுவெல்லாம் உனக்கு என்னத்துக்கு? அக்காவைப் பரிகாசம் செய்யலாகாது" என்று சொல்லி அனுப்பி விட்டாள்.

"இந்தச் சித்திரை மாதம் ஏன் அல்லிக்குக் கலியாணம் செய்து விடக்கூடாது?" என்று அல்லியின் தகப்பனுர் மனைவியிடம் யோசித்தார்.

"பையன் இன்னும் கொஞ்ச நாள் படிக்க வேண்டும். இதற்குள் என்ன அவசரம்?" என்ருள் குப்புசாமியின் தாயார்.

* * *

தாய் தகப்பன்மார்கள் இப்படித்தான் தள்ளிப் போடுவார்கள். அவர்களுக்கு விஷயம் தெரிகிறதில்லை. படிப்பு படிப்பு என்று ஆசைப்படுகிருர்கள். கலியாண மாய்விட்டால் படிப்பு நின்று போக வேண்டுமா? படிப்பதற்கும் இதற்கும் என்ன விரோதம்?

* * *

குப்பு அல்லியைப் பற்றியே எண்ணி எண்ணிப் படிப்பைக் கவனிக்கவில்லை. பரீட்சையில் தேறவில்லை.

அடுத்த வருஷம் கவனித்துக் கஷ்டப் பட்டுப் படித்தான். முன் வருஷம் அல்லியை நினைத்துப் படிப்பைக் கவனிக்காமலிருந்தவன். இந்த வருஷம் அல்லியை நினைத்துப் படிப்பை அதிகமாகக் கவனித்துப் படித்தான். அன்பின் வேகம் விசித்திரம். பல விதமாக வேலை செய்யும். குப்புவுக்குப் பரீட்சை பாஸ் ஆயிற்று. பெற்றோர்கள் சந்தோஷப் பட்டார்கள். அவர்களைவிட அல்லிக்கு அதிக சந்தோஷம். தானும் ஒரு பரீட்சை எழுதி பாஸ் செய்து விட்டதாக மகிழ்ந்தாள்.






**ஷாலிமார்** உட்கோட்

பூசுவதற்குத் தயாரான பெயிண்டு

இது ஒரு பூசுவதற்குத் தயாராக இருக்கும், நீடித்து உழைக்கும், பளபளப்பான பெயிண்டு




**ஷாலிமார்**

அலுமினியம் பெயிண்டு

சிறிதளவு பெயிண்டுசெலவில் அதிக இடத்திற்குப் பூசலாம்




**ஷாலிமார்** மட்கோட்

சுவர்களுக்கேற்ற பெயிண்டு

வீட்டின் உட்புற பிளாஸ்டர், கல் ஷீட், மரச் சாமான்கள் மேல் பூசலாம். நீடித்து உழைக்கும்.




வீடுகளிலும், தொழிற்சாலைகளிலும் பலவித வேலைகளுக் கேற்றது. எவ்வித இடங்களுக்கும் பூசலாம், பிரஷ்ஷினால் பூசலாம், தோய்த்தும் பூசலாம். அல்லது ஸ்பிரே பண்ணலாம், பல தடவைகள் கழுவுவதற் கேற்றது.

**SHALIMAR PAINT, COLOUR & VARNISH CO., LTD.,**
**Post Box 136, Madras 1**

SPW 316

பாலர் தொடர் கதை

# பர்மா ரமணி

அழ. வள்ளியப்பா



## 27. எப்படித் தெரியும்?

தந்தியில் இருப்பதைச் சீக்கிரம் சொல்லும்படி கமலா தேவி கேட்டதும், "இது யார் கொடுத்த தந்தி தெரியுமா? என் அக்காள் மகன் ஆனந்தன் கொடுத்ததாகும். அவன் என்ன, சாமானியப்பட்டவனா? பலே கெட்டிக்காரன்!" என்று கூறினார். பிறகு, "இதோ படிக்கிறேன் கேள்: 'ரமணி கிடைத்துவிட்டான். புறப்பட்டு வரவும் — ஆனந்தன்.' பார்த்தாயா? இனிக் கவலையே இல்லை. ரமணி கிடைத்து விட்டான்" என்று ஆனந்தம் பொங்கக் கூறினார்.

"என்ன? ரமணி கிடைத்துவிட்டானா! அப்பா! நல்ல வேளை. இப்போதாவது கிடைத்தானே! இனி, அவனை நான் ஒன்றுமே சொல்ல மாட்டேன். சொந்தத் தம்பி போலப் பார்த்துக் கொள்வேன்" என்றாள் கமலா தேவி.

"நானும் அப்படித்தான். என் சொந்தத் தம்பி போலவே கவனித்துக் கொள்வேன். ஆமாம், அவன் எனக்கும் தம்பி, உனக்கும் தம்பியாக எப்படி இருக்க முடியும்? முறை சரியாக வராதே!" என்று கேட்டுவிட்டுச் சிரித்தார் மதுரநாயகம். கமலா தேவியும் கூடச் சேர்ந்து சிரித்தாள்.

அன்று ஆபீசுக்கு வந்ததும், முதல் வேலையாக முதலாளியிடம் ரமணி கிடைத்துவிட்ட செய்தியைத்தான் மதுரநாயகம் கூறினார். முதலாளிக்கும் பரம சந்தோஷம். "நமக்கு அதிக சிரமம் வைக்காமல் கிடைத்து விட்டான். உடனே, அவனை அழைத்து வரச் சொல்லி இப்போதே பதில் தந்தி கொடுத்து விடுவோமா?" என்று கேட்டார் முதலாளி.

"ஆனந்தன் என்னையல்லவா புறப்பட்டு வரச் சொல்லித் தந்தி கொடுத்திருக்கிறான்? காரணத்தோடுதான் அவன் அப்படிக் கொடுத்திருக்க வேண்டும்" என்றார் மதுரநாயகம்.

"என்ன காரணமாக இருக்கும்?"

"ஒன்றுமில்லை. ரமணியை ஆனந்தன் கண்டு பிடித்ததும், இங்கே அழைத்து வருவதாகத்தான் சொல்லியிருப்பான். ஆனால், ரமணிக்குத் திரும்பவும் இங்கே வர யோசனையாக இருந்திருக்கும். பயத்தோடு ஏதாவது சொல்லியிருப்பான். நானே நேரில் போனால், எப்படியும் சமாதானப்படுத்தி அழைத்து வந்து விடுவேன். இல்லையா? அதனால்தான் என்னைப் புறப்பட்டு வரச் சொல்லி ஆனந்தன் தந்தி கொடுத்திருக்கிறான்."

"ஆமாம், மதுரநாயகம்! அப்படித்தான் இருக்கும். சரி, இன்று இரவே நீங்கள் புறப்படுங்கள். ரமணியைக் கையோடு அழைத்துக் கொண்டு நாளை இரவே திரும்பி வந்து விடுங்கள். இன்னும் நாலு நாட்கள்தானே நடுவே இருக்கின்றன, சீனத் தூதுகோஷ்டி வருவதற்கு?"

"எனக்கு வேறு என்ன வேலை? நாளை இரவே ரமணியுடன் திரும்பி விடுகிறேன்" என்று கூறிவிட்டு மதுரநாயகம் உற்சாகமாகத் தமது வேலைகளையெல்லாம் முடித்தார்.

அன்று இரவு அவர் ரயில்வே ஸ்டேஷனுக்குச் சென்றார். 'டிக்கெட்' வாங்கிக்கொண்டு ரயிலில் ஏறி உட்கார்ந்தார். ரயில் புறப்பட இன்னும் ஐந்து நிமிஷங்களே இருந்தன. அப்போது, ஒவ்வொரு வண்டியாகப் பார்த்துக் கொண்டே ஒரு பையன் ஓடி வந்தான். அவன் மதுரநாயகம் இருந்த வண்டிக்குப் பக்கத்திலே வந்ததும், மதுரநாயகம் தற்செயலாக அவனைப் பார்த்துவிட்டார். உடனே, "ஏ, சிங்காரம், சிங்காரம்!" என்று கூவினார்.

அந்தப் பையன் சத்தத்தைக் கேட்டதும் நின்றான். "என்னப்பா



விஷயம்? ஏன் இப்படி வியர்க்க விறுவிறுக்க ஓடி வருகிறாய்?" என்று கேட்டார் மதுரநாயகம்.

"உங்களைத் தேடித்தான் சார் வந்தேன். உடனே, கீழே இறங்குங்கள் சார். உம், நேரமாகிறது. வண்டி புறப்படப் போகிறது. இறங்குங்கள் சார்! இதோ உங்களுக்கு ஒரு தந்தி வந்திருக்கிறது சார், முதலாளி பிரித்துப் படித்துப் பார்த்தார். உடனே என்னை அவசரமாக இங்கே அனுப்பி வைத்தார்" என்று கூறித் தந்தியை அவரிடம் கொடுத்தான் சிங்காரம்.

மதுரநாயகம் படித்துப் பார்த்தார். "புறப்பட வேண்டாம். கடிதம் வருகிறது" என்று திருச்சியிலிருந்து தந்தி வந்திருந்தது. ஆனால், அந்தத் தந்தியை ஆனந்தன் அனுப்பவில்லை. அவன் அப்பா வேதநாயகம்தான் அதை அனுப்பியிருந்தார்! மதுரநாயகம் தந்தியைப் படித்ததும் திடுக்கிட்டார்.

"என்ன இது! நம் அத்தான் அல்லவா தந்தி அனுப்பியிருக்கிறார்! அன்று நான் எழுதிய கடிதத்துக்கு இதுவரை அவர் பதிலே எழுதவில்லை. ஆனந்தன்தான் இரண்டு கடிதங்கள் எழுதியிருந்தான். காலையில் வந்த தந்தியும் அவன் அனுப்பியதுதான். இப்போது, அத்தான் இப்படித் தந்தி அனுப்பியிருக்கிறாரே! ஒன்றும் தெரியவில்லையே! சரி, கடிதம் எழுதுவதாகத்தான் தந்தியில் சொல்லியிருக்கிறாரே, பார்க்கலாம்" என்று கூறிக்கொண்டே, ரயில் டிக்கெட்டைத் திருப்பிக் கொடுத்துவிட்டுப் பணத்தை வாங்கிக் கொண்டு வீடு திரும்பினார்.

* * *

ரமணியைக் கண்டுபிடித்து விட்டதாக ஆனந்தன் மாமாவுக்குத் தந்தி கொடுத்த பிறகு, குண்டுமணியிடம் "குண்டுமணி, நாம் எவ்வளவு சிரமப்பட்டு ரமணியைக் கண்டு பிடித்தோம். இந்த வெற்றியை நாம் சிறப்பாகக் கொண்டாட வேண்டாமா?" என்றான்.

"கட்டாயம் கொண்டாட வேண்டும். இன்றைக்கு மத்தியானமே நம் நண்பர்களுக்கெல்லாம் பலமாக ஒரு விருந்து வைத்துவிட்டால் போகிறது!" என்று பதிலளித்தான் குண்டுமணி.

அன்று மத்தியானம் எல்லா நண்பர்களும் ஆனந்தன் வீட்டுக்கு வந்துவிட்டார்கள். அவர்கள் ஒவ்வொருவருக்கும், "இவன்தான் ரமணி" என்று புதுப் பையனை அறிமுகப் படுத்திவைத்தான். எல்லோரும் மகிழ்ச்சியுடன் அவனைப் பார்த்தார்கள்.

சாப்பிடும்போது, ஒரே குதூகலமாகப் பேசிக் கொண்டே அவர்கள் எல்லோரும் சாப்பிட்டார்கள்.

சேகரன் என்ற பையன், "என்ன இருந்தாலும், நமது ஆனந்தன் சாமர்த்தியசாலிதான்! எவ்வளவு பாடுபட்டு இந்த ரமணியைத் தேடிக் கண்டு பிடித்திருக்கிறான்!" என்றான்.

அப்போது ஆனந்தன் "ரமணி! கூச்சப்படாதே! நன்றாகச் சாப்பிடு. உன்னை உத்தேசித்துத்தான் இந்த விருந்தெல்லாம்" என்றான்.

ஆனந்தன் சொல்லுவதைக் கூட அவன் காதில் வாங்கிக் கொண்டதாகத் தெரியவில்லை. இலையில் இருந்ததையெல்லாம் வளைத்து வளைத்து உள்ளே தள்ளிக் கொண்டேயிருந்தான்.

சாப்பாட்டை முடித்துக் கொண்டு எல்லோரும் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள். அப்போது தஞ்சாவூர் போயிருந்த ஆனந்தனின் அப்பா வேதநாயகம் வந்து விட்டார். இரவு வருவதாகக் கூறிவிட்டுப் போனவர், சீக்கிரம் வேலை முடிந்து விட்டதால் பகலிலேயே திரும்பி விட்டார். அவரைக் கண்டதும், ஆனந்தன் துள்ளிக் குதித்துக்கொண்டே அவர் அருகே ஓடினான். "அப்பா, அப்பா! ரமணியை என்னால் கண்டு பிடிக்க முடியாது என்று சொன்னாயே! இதோ பார். இவன்தான் ரமணி!" என்று பெருமையாகக் காட்டினான்.

"ஓ! இவன்தான் அந்த ரமணியா? நல்ல காலம்" என்றார் அப்பா.

"அப்பா, மாமாவுக்குத் தந்திகூடக் கொடுத்து விட்டேன். இரவே புறப்பட்டு நாளைக் காலையில் வந்துவிடுவார்."

"மதுரநாயகத்துக்கு வேலை அதிகமாயிருக்கும், ஏன் அவனை இங்கே வரச் சொன்னாய்? நாமே இவனை அழைத்துக் கொண்டு போயிருக்கலாமே!"

"இல்லையப்பா. மாமா இங்கே வந்து வெகு நாளாகி விட்டதாம். அம்மாதான் மாமாவைப் புறப்பட்டு வரும்படி தந்தி கொடுக்கச் சொன்னாள்."

"சரி, வரட்டும்" என்று கூறிவிட்டு வேதநாயகம் சாப்பிடச் சென்றார். அவர் சாப்பிட்டு விட்டு வருவதற்குள் விருந்துக்கு வந்த நண்பர்கள் எல்லோரும் விடைபெற்றுக் கொண்டு கிளம்பினார்கள். ஆனந்தனும், குண்டுமணியும் அவர்களை மகிழ்ச்சியோடு வழியனுப்பி வைத்தார்கள். ஆனால் அவர்களது மகிழ்ச்சி அதிக நேரம் நீடித்திருக்கவில்லை. தாங்கள் பட்ட பாடெல்லாம் பாழாய்ப் போகப் போகிறது என்பது அவர்களுக்கு அப்போது எப்படித் தெரியும்?

(தொடரும்)

# LOOK WHAT'S HERE!



WULFING Original German

**Sanatogen**

ஸானடோஜன்

## இப்பொழுது புதிதாக 5 விட்டமின்கள்

சேர்க்கையால் பலப்படுத்தப் பட்டிருக்கின்றது

கடுமையாக உழைக்கும் பொழுதும், பலஹீனம் • பசியின்மை • நரம்புத் தளர்ச்சி களைப்பு • உற்சாகமின்மை முதலியவைகள் இருக்கும்பொழுதும் சிறந்த ஊக்குவிக்கும் சக்தி வாய்ந்தது என்று 25,000 டாக்டர்களுக்கு மேல் ஆமோதித்திருக்கிறார்கள்

**IN THE NEW TROPICAL PACKING**

GRS/2a



# ரவிசந்திரிகா

## 40. வழி பிறந்தது

சென்ற மாதம் வெளி வந்த 'ரீடர்ஸ் டைஜெஸ்ட்' பத்திரிகையில் 'ஸர்ப்ப கந்தி' என்ற அபூர்வ மூலிகையைப் பற்றி ஒரு ரஸமான குறிப்பு வெளியாகி யிருக்கிறது. வியனர்ட் வாலஸ் ராபின்ஸன் என்ற அறிஞர் தாம் சந்தித்த ஒரு மூளை நோயாளி யைப் பற்றியும், அவருக்கு ஸர்ப்பகந்தியி லிருந்து தயாரிக்கப்பட்ட ஒரு மருந்தைக் கொடுத்து நோய் எப்படிக் குணமாயிற்று என்ற அதிசயத்தையும், வியந்து வியந்து எழுதி யிருக்கிறார். இதில் ஒரு பெரிய விசேஷமாக அவர் குறிப்பிடுவது என்ன வென்றால், மூளை நோய் குணமான பிறகு அந்த நோயாளி தான் நோயாக இருந்த போது எப்படி யெல்லாம் நடந்து கொண்டான், தன்னைச் சுற்றி என்னென்ன நிகழ்ந்தன என்பதை யெல்லாம் பூரண மான ஞாபக சக்தியோடு பிசகாமல் எடுத்துச் சொல்வதுதான்! இந்த அதிசயத்தை ஓரேயடியாக வியந்து எழுதி யிருக்கிறார் அந்த மேனாட்டு அறிஞர்.

சுரேஷும் இலஞ்சிச் சாமியாரும் ரவீந்திரனுக்குச் சிகிச்சை செய்தபோது இந்த ஆராய்ச்சிக் குறிப்பு வெளியாகி யிருக்க வில்லை. அதனால் என்ன? ஸர்ப்பகந்தி என்ற அந்த அபூர்வ மூலிகை அப்பொழுதும் வளர்ந்துதானே இருந்தது? அதன் சக்தி அப்பொழுதும் வேலை செய்து கொண்டுதானே இருந்தது!

டாக்டர் சுரேஷ் திருச்சி மலைக்கோட்டை யில் ஆண்டார் தெருவில் அப்புலிங்கத் தின் வீட்டிலே யிருந்து சாவித்திரி அம்மா ளோடும், சந்திரிகாவோடும் பேசிக் கொண் டிருந்தபோது, பொதிகை மலைக் காட்டில் சொக்கிகுடியிலே ஸர்ப்பகந்தியின் அதிசய சக்தி கல்யாணி அம்மாளையும் கனகசுந்தரத் தையும் ஒரே ஆச்சரியத்தில் ஆழ்த்திக் கொண்டிருந்தது.

கனகசுந்தரமும் கல்யாணி அம்மாளும் கடைசியாக ரவீந்திரனைப் பார்த்தது, மூளைக் கோளாறு உச்ச நிலையிலே விபரீதங் களை விளைத்துக் கொண்டிருந்த போது அல்லவா? அதை யெல்லாம் எண்ணி எண்ணிக் கல்யாணி அம்மாள் எத்தனை நாளம் கவலைப்பட்டாள்? எத்தனை இரவுகள் அவள் கண்ணீர் வடித்துக் கொண்டே விம்மி விம்மிப் பொழுதைக் கழித்திருக்கிறாள்! எத்தனை முறை உருக்க மாக அந்தக் குத்து விளக்குக்கு முன்னால் நின்று பிரார்த்தனை செய்திருக்கிறாள். "மாங்கல்யத்திலே வைக்கும் மஞ்சளுக்குக் கேடு வரும்படி செய்து விடாதே அம்மா! தாயே!" என்று எத்தனை ஆயிரம் தடவை அவள் குத்துவிளக்கு நாச்சி யாரைக் கும்பிட்டு வேண்டி யிருக்கிறாள். தன்னுடைய பிரார்த்தனை ஒன்றும் வீண் போகவில்லை என்று மனத்துக்குள்ளே எண்ணி உச்சிப் பிள்ளையாருக்கும்



கடற்கரை யாண்டிக்கும் அகிலாண்டேச்வரிக்கும் காணிக்கை செலுத்துவதற்காக இப்பொழுது மஞ்சளை எடுத்துத் துணியிலே முடிந்து கொண்டான்.

கனககசுந்தரத்துக்கு நிம்மதியும் மகிழ்ச்சியும் அளவு கடந்து உண்டாகியிருந்த போதிலும் ஊடே ஊடே ஒரு சந்தேகமும் தோன்றிற்று. இப்பொழுது குணமானது போல் தோன்றுகிற வியாதி மீண்டும் வந்துவிடக் கூடாதே, தமது மாப்பிள்ளை எப்பொழுதும் இந்த மாதிரியே இருக்க வேண்டுமே என்று உள்ளத்துக்குள்ளே கவலைப்பட்டுக் கொண்டார். இந்தக் கவலையின் காரணமாக அடிக்கடி ரவீந்திரனிடம் சென்று "மாப்பிள்ளை, இது யார் தெரிகிறதா?" "மாப்பிள்ளை அதோ நிற்கிறதே அது என்ன மரம்?" "மாப்பிள்ளை, இதோ என் பக்கத்தில் நிற்பது யார் சொல்லுங்கள்" என்று கேள்வி மயமாகக் கேட்டுக் கொண்டிருந்தார். ரவீந்திரன் தன் மாமனார் கேட்கும் ஒவ்வொரு கேள்விக்கும் சிரித்துக் கொண்டே பதில் சொல்லி வந்தான். ஆச்சரியம் என்னவென்றால் முன்னைப் போல முன் கோபம் என்பதோ, ஆத்திரமான படபடப்பான வார்த்தை என்பதோ மருந்துக்குக் கூட இல்லை! சர்வ சாதாரணமாக, அளவற்ற பொறுமையோடு பதில் சொல்லி வந்தான். இலஞ்சிச் சாமியார்தான் குறுக்கிட்டுப் பேசினார்: "பிராகதார்வான்! ஏது நீங்கள் கேட்கிற கேள்விகளைப் பார்த்தால் சாதாரண மனிதனுக்கே மூளைக் கோளாறு வந்துவிடும் போலிருக்கிறதே! இந்தக் கட்டை உங்கள் மாப்பிள்ளைக்கு மருந்து கொடுக்கப் போய், கடைசியில் மாப்பிள்ளைக்கு மூளை சரியாகி விட்டது, சாமியாருக்குத்தான் பைத்தியம் பிடித்தது என்ற கதையாக அல்லவா முடிந்து விடும் போலிருக்கிறது!"

இப்படி இலஞ்சிச் சாமியார் சொன்னதும், அவரும் சிரித்தார். கனகசுந்தரமும் சிரித்தார். கல்யாணி அம்மாளும் சிரித்தாள்! அதுமட்டுமில்லை. ரவீந்திரனுமே சிரித்தான். பயங்கரச் சிரிப்பு இல்லை. சாதாரணமான, சகஜமான சிரிப்பு. பிறர் பேசுவதில் உள்ள அர்த்தத்தைப் புரிந்துகொண்டு சிரிக்கிற சிரிப்பு. முன்னைப் போல் தானே தனக்குள் சிரித்துக் கொள்ளும் அந்தப் பைத்தியச் சிரிப்பு இல்லை.

மலைக் காட்டுக்குப் போய்ச் சேர்ந்த மறுநாள் மாலை இலஞ்சிச் சாமியார், ரவீந்திரன், கல்யாணி அம்மாள் மூவரும் ஆலமரத்தடியில் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். அப்பொழுது கனகசுந்தரம் கேட்டார்: "சாமிகளே! நான் இப்படிக் கேட்கிறேன் என்று கோபப்படாதீர்கள். நம்முடைய மாப்பிள்ளைக்கு வியாதி நன்றாகக் குணமாகி விட்டது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் நாம் கேள்வி கேட்காமலே அவராக நம்மிடம் ஒன்றும் பேசக் காணோமே. கேட்கிறதுக்கு மட்டுந் தானே பதில் சொல்லுகிறார்!"

கல்யாணி அம்மாள் மனத்துக்குள் இதே சந்தேகத்தை வைத்துக் கொண்டிருந்த போதிலும், இப்பொழுது தன் தகப்பனார் அதை இத்தனை வெளிப்படையாகக் கேட்டது அவளுக்கு எப்படியோ இருந்தது. சாமியார் ஏதாவது இசைவு கேடாகப்



பதில் சொல்லக் கூடாதே என்று பயம் வேறு! ஆனால் சாமியார் இந்தக் கேள்விக்கும் சிரித்தார். சிரித்துவிட்டுச் சொன்னார்: "மிராசுதார்வாள்! பெண்ணைப் பெற்றவருடைய உணர்ச்சிகள் எனக்கும் கொஞ்சம் தெரியும். மாப்பிள்ளை என்று எனக்கு ஏற்படவில்லையென்றாலும், நானும் ஒரு பெண்ணுக்குத் தகப்பனாக இருந்திருக்கிறேன். உங்கள் உணர்ச்சி புரிகிறது!"

இப்படிச் சொல்லும்போது இலஞ்சிச் சாமியாருடைய கண்கள் கலங்கின. அந்த துக்கத்தை அடக்கிக் கொண்டு, தொண்டையை ஒரு தரம் இருமிச் சரிப்படுத்தியவராய் மேலும் பேசினார் சாமியார்:

"உங்கள் மாப்பிள்ளைக்கு மூளையில் இருந்த நோயெல்லாம் வாசியாகி விட்டது. ஆனால் ஒரே ஒரு குறை. தானாக ஒரு விஷயத்தை மூளைக்குள்ளே யோசித்து வகைப்படுத்திப் பேசக் கூடிய அளவுக்கு இன்னும் மூளை நரம்புகளுக்குத் தெம்பு ஏற்பட வில்லை. அத்தோடு உங்கள் மாப்பிள்ளை ஒரு பெரிய சங்கீத வித்வான் ஆயிற்றே. அந்த சங்கீதக் கற்பனைகள் எல்லாம் மூளைக்குள்ளே இப்பொழுது உறங்குகின்றன. அவை விழிப்படைந்து



கண் திறந்து பேசவேண்டும். ஏதோ எனக்குத் தெரிந்த பாஷையில் சொல்லுகிறேன். டாக்டர் சுரேஷ் வந்தாரானால், இதைப் பெரிய பெரிய லத்தீன் வார்த்தைகளைப் போட்டுச் சொல்லுவார். வெறும் இங்கிலீஷ் வார்த்தை யென்றால் நமக்கெல்லாம் புரிந்து விடுமே!"

"என்ன?" என்று ஓரே வியப்போடு கேட்டார் கனகசுந்தரம்.

"ஆமாம். இந்தக் கட்டைக்கும் கொஞ்சம் இங்கிலீஷ் தெரியும். ஆனால் இந்தக் காவிக் கோலத்திலே வந்துவிட்ட பிறகு, இங்கிலீஷாவது ஒன்றாவது! எல்லாம் கஞ்சா பாஷையோடு சரி!"

"கஞ்சாவா?" என்று கேட்டார் கனகசுந்தரம், மேலும் ஆச்சரியத்தோடு.



"ஆமாம். வாழ்க்கையின் துக்கங்களை மறப்பதற்காக அந்தப் பழக்கம் ஆரம்பித்தது. பிறகு அது பற்றிக் கொண்டது. அடிக்கடி சொக்கிகுடிக்கே வந்து நம்முடைய சொக்கப்பனிடமே கஞ்சாக் கொள்முதல் செய்யும் அளவுக்கு இந்தப் பழக்கம் வளர்ந்தது. இப்பொழுது கொஞ்சம் கொஞ்சமாக அது குறைந்து விட்டது. எல்லாம் சுரேஷை இங்கே சந்தித்த பிறகு ஏற்பட்ட மாற்றம்தான்!"

இப்படிச் சொல்லி விட்டுப் பெருமூச்சு விட்டார் இலஞ்சிச் சாமியார். கல்யாணி அம்மாள் கேட்டாள்: "ஏன் சாமி. அப்படியானால் சுரேஷ் டாக்டரை உங்களுக்கு இதற்கு முன்பு தெரியாதா?"

சாமியார் பளிச்சென்று பதில் சொன்னார்: "அம்மா அதெல்லாம் சாவகாசமாகச் சொல்லுகிறேன். இப்பொழுது உங்கள் கணவருக்கு நோய் முழுதும் சரியாகி, அவர் முன்போல் புல்லாங்குழலை எடுத்து வைத்து இந்த மலைப் பிராந்தியத்திலே மரமும் செடிகளும் கொடிகளும் பள்ளத்தாக்கும் விம்மி எதிரொலிக்கும்படியாக இசை பொழியட்டும். அதுதான் நம்முடைய முதலாவது வேலை. இந்தக் கட்டையைப் பற்றிய கதையெல்லாம் இப்பொழுது எதற்கு?"

இவ்வாறு பேச்சை முடித்து விட்டு எழுந்தார் இலஞ்சிச் சாமியார். கனகசுந்தரமும் எழுந்தார். கல்யாணி அம்மாளும் ரவீந்திரனும் ஒருவரை ஒருவர் இமை கொட்டாமல் ஒரு விநாடி பார்த்தார்கள்.

"குடிசைக்குப் போகலாமா?" என்றாள் கல்யாணி, ரவீந்திரனைப் பார்த்து.

"போகலாம். அதற்கு ஏன் என்னை அப்படி ஏற இறங்கப் பார்த்தாய்? பைத்தியம் முழுதும் தீர்ந்து விட்டதா, அல்லது கொஞ்சம் மிச்சம் இருக்கிறதா என்று பார்க்கிறாயா? நீ அழ மாட்டேன் என்று சொல்லு. நான் எனக்குப் பைத்தியம் பிடித்த விநாடியிலிருந்து என்னென்ன நடந்தது என்பதை யெல்லாம் வரிசையாகச் சொல்லுகிறேன். அத்தனையும் எனக்கு நன்றாக ஞாபகம் இருக்கிறது!" என்றான் ரவீந்திரன்.

இலஞ்சிச் சாமியார், கனகசுந்தரம் இருவரும் முன் நடந்தார்கள். அவர்களை அடுத்து ரவீந்திரனும் கல்யாணி அம்மாளும் குடிசை நோக்கி நடந்தார்கள்.

அன்றுதான் கல்யாணி அம்மாள் நிம்மதியாக இருந்தாள் இத்தனை நாட்களில்! இத்தனை நாட்களுக்குப் பிறகு அன்றுதான் கல்யாணி அம்மாள் முதல் முறையாக நிம்மதியோடு நித்திரை செய்தாள். அன்று தான் அவள் தன் மாங்கல்யச் சரட்டைத் தொட்டுப் பார்த்துக் கண்களிலே ஒற்றிக் கொண்டு குல தெய்வங்களை யெல்லாம் எண்ணி ஆனந்தக் கண்ணீர் வடித்தாள்.

மறுநாள் விடியற்காலை கல்யாணி அம்மாள் வழக்கம்போல் ஐந்து மணிக்குக் கண் விழித்துப் பார்த்தபோது, இருளும் ஒளியும் கலந்த அந்த விடியற்காலை நேரத்தில் பனிப் படலத்தை ஊடுருவிக் கொண்டு, தூரத்தில் தீ எரிவது தெரிந்தது. பதறிப் போய்ப் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டு கூர்ந்து பார்த்தாள். தொலைவில் பளிஞர் தலைவரின் குடிசைக்கு எதிரே ஒரு பெரிய குழியில் யாரோ தீ வளர்ப்பது தெரிந்தது. கண்ணைக் கசக்கிக் கொண்டு பார்த்ததில், யாரோ ஒரு அம்மாள் உட்கார்ந்து அந்தத் தீயைக் கிளறுவதும் மரச் சுள்ளிகளை அதில் வைப்பதுமாக ஒரு விநோதமான காட்சி தெரிந்தது. வெளியே எழுந்து வந்தாள். குடிசைத் திண்ணையில்

திட்டத்தின் முன்னேற்றம் நெம்பர் 3




மக்களின் சுபீட்சத்திற்கான
மக்களின் திட்டம்

DA 55/130 TM



# ஒரு தொழிலின் அவசியத்தை நிர்ணயிப்பது எப்படி?

ஒரு சைக்கிள், தையல் மிஷின் அல்லது ஒரு லாந்தல் விளக்கையோ ஒருவரிடம் காண்பியுங்கள். அவரிடமே வார்ப்பெடுத்த ஓர் எஃகுக்கட்டியையும் காண்பியுங்கள். நிச்சயமாக அவர் எஃகுக் கட்டியை திரும்பியும் பார்க்கமாட்டார். ஆயினும் தொழிற்சாலைகளிலும், இயந்திரங்களிலும், கட்டடங்களிலும்...மற்றும் நாம் நாள் தோறும் உபயோகிக்கும் அற்றுக்களுக்கான பொருள்களைத் தயார் செய்ய எஃகானது இன்றியமையாதது.

இந்திய எஃகுத் தொழில் துவக்கப்பட்டு ஐம்பது ஆண்டுகள் நிரம்பவில்லை எனினும் இன்று நம் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் அது ஒரு ஜீவநாடியாக விளங்குகிறது. பிற நாடுகள் அணுக முடியாத குறைந்த அடக்க விலையில் சுமார் 17 லக்ஷம் டன் வார்ப்பெடுத்த எஃகு கட்டிகள் நம் நாட்டில் உற்பத்தியாகின்றன. இந்த 17 லக்ஷ டன்களில், 10 லக்ஷ டன்களுக்கு மேலான எஃகு, டாடா ஸ்டீல் தொழிற்சாலையிலேயே தயாரிக்கப்படுகிறது. இரண்டாவது ஐந்தாண்டு திட்ட ஆரம்ப காலத்திலேயே சுமார் 20 லக்ஷம் டன்கள் எஃகு உற்பத்தி செய்ய டாடா கம்பெனியார் திட்டம் செய்துள்ளனர்.

**தனியார் தொழில் தேச நலனுக்காகப் பாடுபடுகிறது.**

**தி டாடா அயரன் & ஸ்டீல் கம்பெனி லிட்.**

TM. 573

இலஞ்சிச் சாமியார் உட்கார்ந்து உருக்கமான குரலில் பாடிக் கொண்டிருந்தார் :

வெட்டாத சக்கரம் :
　　பேசாத மந்திரம் : வேறொருவர்க்கு
எட்டாத புஷ்பம் :
　　இறையாத தீர்த்தம் : இனிமுடிந்து
கட்டாத லிங்கம் :
　　கருதாத நெஞ்சம் : கருத்தினுள்ளே
முட்டாத பூஜையன் றோ
　　குரு நாதன் மொழிந்ததுவே !

கல்யாணி அம்மாள் எழுந்து வந்து நிற்பதைப் பார்த்ததும் இலஞ்சிச் சாமியாருக்கு விஷயம் புரிந்து விட்டது.

"என்னம்மா ! அந்தத் தீயைப் பார்த்து அதிசயப் படுகிறீர்களா ? அது இந்தச் சொக்கி குடியின் அணையாத நெருப்பு அம்மா. பளியர்களுடைய தலைவனின் குடிசைக்கு எதிரே இந்தத் தீ அணையாமல் இரவும் பகலும் எரிந்து கொண்டிருக்கும். அது அணைந்து விட்டால் இந்தச் சமூகத்துக்கே கேடு வரும் என்பதாகப் பளியருடைய நம்பிக்கை. ஆகையால் இந்த நெருப்பு அவிந்து விடாதபடி பாதுகாக்கிற பெரும் பொறுப்பு தலைவனின் மனைவிகளுடைய தனிப் பொறுப்பு !" என்று கூறினார் சாமியார்.

கல்யாணி அம்மாளுக்கு ஒரே திகைப்பாகப் போய் விட்டது. தீயைப் பற்றிய செய்தி எத்தனை திகைப்பைக் கொடுத்ததோ, அத்தனை திகைப்பை 'மனைவிகள்' என்ற வார்த்தையும் கொடுத்தது.

"மனைவிகள் என்றீர்களே. அப்படியானால் இந்தச் சொக்கப்பனுக்கு எத்தனை மனைவிகள் ?" என்று கேட்டாள் கல்யாணி.

"இரண்டு மனைவிகள் அம்மா. பகலும் இரவும் இவர்கள் மாறி மாறி அந்தத் தீக்குழிக்கு அருகிலே உட்கார்ந்து கொண்டு நெருப்பு அணையாதவாறு சுள்ளிகளை வைத்துக் கிளறிக் கொண்டே யிருப்பார்கள் !" என்றார் சாமியார்.

"இவர்களுக்குள் சண்டை வராதோ ?" என்று கேட்டாள் கல்யாணி.

"வராது அம்மா ! சண்டை வந்தால் நெருப்பைப் பார்த்துக் கொள்வது யார் ? தலைவனுடைய மனைவிகளைத் தவிர வேறு யாருக்கும் அந்த அதிகாரம் கிடையாதே ! இவர்கள் தங்களுக்குள் சண்டையிட்டுக் கொண்டு நெருப்பு அணையும்படி விட்டு விட்டால், இந்தப் பளியர் சமூகமே நாசமாகிவிடும் என்றல்லவா நம்புகிறார்கள். ஆகையினால் சமூகத்தின் நன்மைக்காக இவர்கள் ஒற்றுமையோடு வாழ்வார்கள். தவிரவும் இந்த மலை ஜாதி மக்களுக்குள் இது சகஜமான பழக்கம். சொத்து, உடைமை, உரிமை என்ற உணர்ச்சிகளே இவர்களுக்குக் கிடையாது. சமூக உணர்ச்சி ஒன்றுதான் இவர்களுக்கு உண்டு. சொக்கி குடியின் நன்மைக்காக அவர்கள் எதுவும் செய்வார்கள் !"

இப்படி இவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே திடீரென்று யானை பிளிறும் ஓசை கேட்டது. கல்யாணி அம்மாள் உடல் பதறி விட்டாள்.

"பதறாதீர்கள் அம்மா. இந்தச் சொக்கி குடியின் கொம்பன் யானை வருகிறது. திண்ணையிலே நின்று பாருங்கள் அதை !" என்று சொல்லிக் கொண்டே சாமியார் அந்த ஆசிரமக் குடிசைக்கு வெளியே நின்ற பாதிரி மரத்தை நோக்கி நடந்தார். அங்கே ஒரு பொன் கொன்றை மரமும் நின்றது. அதன் அடியில் ஒரு சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்திருந்தார் சாமியார். கல்யாணி அந்த மரத்தையும் அதன் அருகே இருந்த கல்லையும் கூர்ந்து பார்த்தாள்.

"கலி கல் ஆனை" என்று யானைக்குப் பின்னாலிருந்து ஒரு பெண் குரல் கேட்டது. வேகமாக நடந்து வந்த யானை அந்த



மரத்தை ஒரு தரம் சுற்றி வந்து சிவலிங்கத்துக்கு முன்னால் நின்றது.

"கலெகா கட்கடு" என்று மீண்டும் அந்தப் பெண்ணின் குரல் கேட்டது. என்ன ஆச்சரியம் ! அந்த யானை தன் தும்பிக்கையை வளைத்துச் சிவலிங்கத்துக்கு மேலே பிடித்தது. அதன் துதிக்கையிலிருந்து தண்ணீர் அபிஷேகமாகக் கொட்டியது.

மறு கணம் அந்தப் பெண்—சொக்கி—அங்கே வந்தாள். அவளுடைய கையிலேயிருந்த ஒரு பூக்குடலையைச் சிவலிங்கத்துக்கு முன்னால் வைத்துவிட்டு வணங்கினாள். இலஞ்சிச் சாமியார் அங்கே நடந்து சென்று சொக்கிக்கு இரண்டு கையினாலும் ஆசி செய்துவிட்டு, அந்தப் பூங்குடலையை எடுத்து அதிலிருந்த புஷ்பங்களைச் சிவலிங்கத்துக்கு அர்ப்பணம் செய்தார்.

"கந கட" என்றாள் சொக்கி. யானை வலது புறமாகத் திரும்பி நடக்க ஆரம்பித்தது. நேரே தலைவனுடைய குடிசையை நோக்கி வேகமாகச் சென்றது யானை. சொக்கி அந்த யானையைப் பின்தொடர்ந்து

கம்பீரமாக ஒரு வன மோகினியைப் போல் நடந்து சென்றாள்.

* * *

சொக்கிகுடியில் இந்த நிம்மதியான சூழ்நிலையில் ஒரு வாரம் கழிந்தது. 'ஸர்ப்ப கந்தி' என்ற மூலிகையை ஆராய்ந்து, அதிலிருந்து செய்யக் கூடிய மருந்து வகைகளைப் பரிபாஷையிலே நம்முடைய சித்தர்கள் சொல்லப் போனதை, தற்கால



வைத்திய முறையில் வைத்தியக் கல்லூரிப் பேராசிரியர் திருப்பதிநாதன் ஆராய்ந்திருந்ததை, சுரேஷ் இலஞ்சிச் சாமியாருக்குச் சொன்னார். அது மகத்தான பலனை அளித்தது. இரண்டே வாரத்தில் மூளை தெளிவு அடைந்ததோடு, ரத்த வேகமும் சமனாயிற்று. ஆனால் கனகசுந்தரம் சந்தேகித்தபடி ரவீந்திரனுடைய உள்ளத்தில் சிந்தனை ஊற்று இன்னும் திறக்கவில்லை. ஆற்று மணலின் பரப்புக்கு அடியிலே தண்ணீர் தேங்கி மறைந்து நிற்பதைப் போல ரவீந்திரன் என்ற அந்த சங்கீதக் கலைஞனுடைய மனத்தின் அடித்தளத்தில் கற்பனைகள் எல்லாம் அமுங்கி மறைந்து நின்றன. மணல் பரப்பைக் கிளற வேண்டும். ஊற்றுக்கண் திறக்க வேண்டும்.

"புல்லாங்குழல் ஒன்றிலே துளை அடைபட்டிருந்தால் எப்படியிருக்கும்? ஸ்வரஸ்தானங்கள் எல்லாம் சரியாகவே இருக்கின்றன. ஆனால் துவாரங்களில் அடைப்பு இருக்கிறது. அது திறக்க வேண்டும். நிச்சயம் திறந்து விடும். கவலைப்படாதீர்கள். டாக்டர் சுரேஷ் அதற்கும் ஏதோ வழி யோசித்து வைத்திருக்கிறார்!" என்று ஆறுதல் சொல்லிக் கனகசுந்தரத்தை ஊக்கப் படுத்தினார் இலஞ்சிச் சாமியார். கல்யாணி அம்மாளுக்கும் இந்த வார்த்தைகள் தைரியமும் நம்பிக்கையும் தந்தன.

இப்படியிருக்கும் போதுதான் பௌர்ணமியன்று அந்தச் சம்பவம் நடந்தது.

வழக்கம்போல் சொக்கிகுடியில் நிலவுப் பாறையில் பூஜை நடக்க வேண்டிய நாள் அல்லவா அது. சொக்கி அன்று காலை மலையருவியிலே குளித்துவிட்டு, இலஞ்சிச் சாமியார் புதிதாகப் பிரதிஷ்டை செய்திருக்கும் சிவலிங்கத்துக்கு அபிஷேக நீரை ஆனையின் துதிக்கையிலே தாங்கும்படி கட்டளை செய்துவிட்டு, பாதிரி மரத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தபோது திடீரென்று இரண்டு பளிஞர்கள் தலைதெறிக்க ஓடிச் சொக்கப்பனுடைய குடிசைக் குள்ளே நுழைவதைக் கண்டாள்.

தலைவனுடைய குடிசைக் குள்ளே முன்னறிவிப்பு இல்லாமல் சாதாரணமாக யாரும் இப்படி ஓடுவது கிடையாது. எனவே இந்தக் காட்சி சொக்கிக்குத் திகைப்பைக் கொடுத்தது. பளிஞர்களைப் பின் தொடர்ந்து செல்லலாமா அல்லது பாதிரி மரத்தை நோக்கி நடக்கலாமா என்று சொக்கி ஒரு கணம் தயங்கி நிற்பதற்குள், இலஞ்சிச் சாமியார், இதைக் கவனித்தவர், சிரித்துக் கொண்டே சொக்கியைப் பார்த்து வேகமாக நடந்து வந்தார்.

"என்னம்மா திகைக்கிறாய்! பளிஞர்கள் அப்படி ஓடுகிறார்களே என்று பார்க்கிறாயா?" என்று புன்முறுவலோடு கேட்டார் சாமியார்.

சொக்கிக்கு அந்தக் கேள்வியோடு கலந்து நின்ற சாமியாரின் சிரிப்பு புரியவில்லை.

"என்ன சாமி! சிரிக்குது?" என்று கேட்டாள் அவள்.

"ஆமாம். மங்கள காரியம் என்றால் சந்தோஷத்தோடுதானே அதை வரவேற்க வேண்டும்? சிரிக்காமல் வேறு என்ன செய்யச் சொல்கிறாய்?"

"அதுக்காகவா இவங்க இப்படி ஓடுறாங்க!" என்று கேட்டாள் சொக்கி.

"ஆமாம்" என்று சொல்லிக் கொண்டே இலஞ்சிச் சாமியார் கிழக்குத் திசையைச் சுட்டிக் காட்டினார்.

அது உத்தராயண புண்ணிய காலம். தை மாதம். வடக்கு நோக்கித் தன் ஒளித் தேரைத் திருப்பிக் கொண்டு நின்ற சூரியனின் செங்கிரண ஒளியிலே சொக்கி கிழக்கே கூர்ந்து பார்த்தாள். பாதிரி மரத்தின் உடம்பிலிருந்து பொன்னும் வெள்ளியும் கலந்து உருக்கி விட்டது போலப் பால் வடிந்து கொண்டிருந்தது!

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு ஒருமுறை நடக்கிற சம்பவம் அது. சொக்கி குடிப் பளிஞர்களின் சமூக நம்பிக்கையோடு தீவிரமாகக் கலந்து நின்று விட்ட ஒரு மகத்தான மங்கள அறிகுறி அது.

"தை பிறந்தால் வழி பிறக்கும் என்று சொல்லுவார்கள். வழி பிறந்து விட்டதம்மா சொக்கி!" என்று சொல்லி ஒரு சித்தனைப் போல ஆனந்தக் களிப்போடு குதித்தார் இலஞ்சிச் சாமியார். (தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram.

# தளதளக்கும் பானம் வயிற்றுக் கோளாறுகளை நிறுத்துகிறது



## . . . அது உங்களுக்கு குணம் செய்வதுடன் புத்துணர்ச்சியும் தருகிறது!

ஈனோ சௌமியமானது எனினும் வயிற்றுப் புளிப்பை நீக்குவதில் அற்புத சக்தி வாய்ந்தது. எவ்வித கெடுதியும் செய்யாமல் அது புளிப்பு மிகுதியாலுள்ள அஜீர்ணம், வாயுப்பொருமல், நெஞ்செரிச்சல் முதலிய உபாதைகளை துரிதமாயும் நிச்சயமாகவும் நிவர்த்திக்கிறது.

இதற்குக் காரணம், ஈனோஸ் வயிற்றிலுள்ள அமிலமிகுதியை வென்று சமனமூட்டும் விசேஷ குணம் உடையதாயிருப்பதுதான். மிதமீறி புசிப்பதாலோ அல்லது உண்பது எளிதில் ஜீரணமாகாமலோ வயிற்றில் ஏற்படக்கூடிய கோளாறுகளை நீக்கி, ஜீரண உறுப்புகளை மீண்டும் ஒழுங்குபடுத்த அது உதவுகிறது.

ஈனோ புத்துணர்ச்சியும் உற்சாகமும் ஊட்டுவது . . . எட்டே விநாடிகளில் நீங்கள் சுகம் பெறுகிறீர்கள்— வயிற்றுக்கு மட்டுமல்லவாய்க்குக்கூட! எப்பொழுதும் ஈனோஸ் 'ப்ரூட் ஸால்ட்' ஒரு புட்டி கையோடு காவலாய் வைத்திருங்கள்.




# ஈனோஸ்

## 'ப்ரூட் ஸால்ட்'

